உ

# களவியற்காரிகை

உரையுடன்

சென்னைச் சர்வகலாசாலைத்
தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியர்
S. வையாபுரிப்பிள்ளை, B.A., B.L.
பரிசோதித்தது

1931.

# உள்ளுறை

## முன்னுரை

அகப்பொருட் டுறைகளை யினிதின் விளக்கும் இந்நூல் பல வகையானுஞ் சிறப்புமிக்க நூல்களிலொன்று. இறையனாரகப்பொருளின் உரையில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ள கலித்துறைச்செய்யுட்கள் இன்ன நூலைச் சார்ந்தனவென்று சில வருடங்கட்கு முன்வரை தெளியப்படாதே இருந்தது. அச்செய்யுட்க ளனைத்தும் பாண்டிக் கோவை யென்ற ஓரரிய கோவை நூலிலிருந்தெடுக்கப்பட்டன வென்பதை இந்நூலின் உரையே தெளிவாக வுணர்த்திற்று*. இக்கோவையேயன்றி அரையர்கோவை, வங்கர்கோவை, தில்லையந்தாதி, கோயிலந்தாதி, நறையூரந்தாதி, பொருளியல், கிளவிமாலை, கண்டனலங்காரம், பல்சந்தமாலை, கிளவித்தெளிவு, இன்னிசைமாலை, தமிழ்நெறி விளக்கம் முதலிய வேறுபல அரிய நூல்களும் இதன்கணுள்ள மேற்கோட்பாக்களின் குறிப்புக்களாற் புலனாகின்றன. பொருளிலக்கணங் கற்பவருக்கும், தமிழ் இலக்கிய சரிதத்தை ஆராய்பவர்க்கும், தேச சரித்திரத்தில் ஆராய்ச்சிசெய்து வருபவர்க்கும் இந்நூல் பலவரிய விஷயங்களை யுணர்த்தவல்லது. அன்றியும், கவிதைச் சுவையை நுகர விரும்புவோர்க்கும் இஃது ஓர் இனிய பெருவிருந்தாக அமைந்து கிடப்பதாம். ஆதலால், இந்நூல் தமிழ்மக்களால் விரும்பிப்போற்றப் பெறத்தக்க அருமை வாய்ந்ததென்பது ஒரு தலை.

இவ்வரிய நூலுக்கு இப்போது கிடைத்துள்ளது ஒரு கையெழுத்துப் பிரதியே யாகும். இது சென்னை அரசாங்

---

* இவ்விஷயத்தை முதன்முதலாக வெளியிட்டவர்கள் எனது நண்பர் ஸ்ரீமான் மு. இராகவையங்காரவர்கள்.

கத்தாரது தொன்னூல் - நிலயத்திலுள்ளது. இப்பிரதியி
னிறுதியில் எழுதப்பெற்றுள்ள ஆங்கிலக் குறிப்பினால்
இஃது ஆழ்வார் திருநகரி மலையப்பபிள்ளைக் கவிராயருக்
குரிய ஏட்டுப் பிரதியினின்றும் நாதமுனிப் பிள்ளை யென்
பார் 12-6-1920-ல்பிரதிசெய்ததென அறியக்கிடக்கின்றது.
இப்பிரதி குறைப்பிரதியே; இதன்கண் நூலின் முதலும்
இறுதியும் காணப்படவில்லை. அன்றியும், வாசிப்போர்
பயனடையக்கூடாதவண்ணம் பிழை பொதிந்தும் இதழ்
கள் முறைபிறழ்ந்தும் பலவாறாகக் கேடுற்றிருக்கின்றது.
இடையிடையே செய்யுட்களும் வாக்கியத் தொடர்களும்
மறைந்து போய்விட்டன. எனவே, எத்துணை முயன்றாலும்
முழுவது மிதனைச் செப்பஞ்செய்தல் இயலாததொன்றாம்.
ஆயினும், கிடைத்தவளவிலே தானும் இந்நூற்பகுதி மிக
வும் பயன்படக் கூடியதா யிருத்தலின் ஒருவாறு செப்பஞ்
செய்து இப்போது வெளியிடப்பெறுகின்றது. செய்யுட்க
ளும், தொடர்களும், எழுத்துக்களும் காணப்பெறாத இடங்
களிற் புள்ளி நிரைத்திருக்கின்றேன். மறைந்தொழிந்த
பகுதியை யொருவாறு அனுமானிக்கக்கூடிய விடங்களில்
அனுமானித்த தொடர் முதலியவற்றை இருதலைப் பகரத்
திற் [ ] காட்டி யிருக்கின்றேன். தவறான இடைச்செரு
கல்களை இருதலைப் பிறை ( ) யிலும் தவறான பாடங்
களின் உத்தேசபாடங்களைக் கேள்விக்குறி பெய்த இரு
தலைப் பிறையிலும் அமைத்திருக்கின்றேன். இடங் காட்
டப்பெறாத மேற்கோள்களுள்ளே இப்போது விளங்கின
வற்றிற்கு இடங்கள் கொடுத்திருக்கின்றேன்.

யாப்பருங்கலக்காரிகை யாப்புக்குரிய விஷயங்களை
யெல்லாம் கலித்துறைச் செய்யுளால் விளக்குவதுபோல,
இந்நூல் அகப்பொருட் செய்திகளை அந்தாதித்தொடையி



லமைந்த கலித்துறைச் செய்யுட்களாற் சுருங்கவுரைக்
கின்றது. இதன் உரை மிகவும் பாராட்டற்பாலது. இறை
யனார் களவியற் சூத்திரங்களை யடிப்படையாகக் கொண்டு
பரந்துபட்ட அகப்பொருட் செய்திகட்கெல்லாம் அரிய
மேற்கோள்கள் காட்டி விரிந்து செல்கின்றது. தொல்
காப்பிய முதலிய இலக்கண நூல்கள் தவிரப் பிறநூல்
களிலிருந்து மேற்கோள் தருமிடங்களில், அந்நூல்களின்
பெயர்களையும் இவ்வுரை சுட்டி யுணர்த்துகின்றது.

இந்நூலின் பெயர் புலப்படவில்லை. தொன்னூல் -
நிலயக் கையெழுத்துப் பிரதியில் 'இறையனா ரகப்
பொருட்டுறை சங்கச் செய்யுளாக உதாரண மெழுதியது'
எனக் காணப்படுகின்றது. இது, நூல் இன்னதென
வுணர்தற்கு அதன் புறத்தே யெழுதிவைக்குந் தலைக்
குறிப்பெனவே கொள்ளற்பாலது; நூற்பெயரின்றென்
பது திண்ணம். இப்போது கொடுக்கப்பெற்றுள்ள 'கள
வியற் காரிகை' என்னும் பெயர் என்னாற் படைத்துக்
கொள்ளப்பட்டதே யாகும்.

கிடைத்துள்ள இந்நூற்பகுதி, பாலைக் கருப் பொரு
ளுணர்த்துங் கலித்துறைக் குரிய மூன்றாமடியின் மூன்
றாஞ் சீரோடு தொடங்குகின்றது. ஆதலால், இச் செய்
யுட்கு முன்பு சுமார் பத்துக் கலித்துறைகளும் அவற்றின்
உரைகளும் மூலப்பிரதியில் அமைந்திருக்கலாமென்று
கொள்ளலாம். நூலின் இடையிடையே விட்டுப்போயின
செய்யுட்களின் எண்ணும் ஒருவாறு ஊகித்தல் கூடும்.
இவ்வுகத்திற் கியையக் கலித்துறைச் செய்யுட்களின்
எண்கள் கொடுக்கப்பெற்றுள்ளன.

இவ்வரிய தமிழ் நூலினைத் தமது 'கலாநிலய'ப் பத்
திரிகையில் வெளியிடுதற் கிணங்கிய பத்திராதிப ரவர்க
ளுக்கு எனது நன்றி யுரிமையாகின்றது.

# களவியற் காரிகை.

உரிய வேணுவ [1]னத்தெலெல வெளியி
ஞாடு தோன்றி யுலகமெ லாம்போற்றுவ
கரிய மாணிக்க மல்லாத வேய்முத்தாங்
கையி ஞலுந் தொடோமுறு கண்ணதாய்
விரியு மோட்டுமுத் தென்குற மான்முலே
விலக்குளரொகு மொரணப னேவிடை
வரிய ராவின் மடிக்கீழ்க் கிடந்தபொன்
மாணிக் கந்தரில் வாங்குவ ராளேயே.

11. ... ... ... ...
... ... ... ...
... ... [மற] த்திய ரந்நில மக்கடம்பேர்
துணிவன [2]வீங்குவ யாவுங் கருவேன்று சோல்லினவே

இச்சூ... ... வெனின், பாலேக்குக் கருவறி வித்தலேக் கருதிற்று. வரலாறு:—தெய்வம் பகவதியும் ஆதித்தனும்; மா வலியழிந்த செந்நாயும் வலியழிந்த யானேயசம்; மரம் இருப்பையும் ஓமை.........பருந்தும் புருவும்; பறை பூசற்பறையும் ஊரெறிபறையும்; செய் கை நிரைகோடலும்.........ம்; யாழ் பாலேயாழ்; பண் பஞ்சுரம்; தலேமகன்பேர் மீளி விடலே காளே; தலேமகள் .........ம் பாதிரிப்பூவும்; நீர் அறுநீர்க்கூவலும் அறு நீர்ச் சுனேயும்; அந்நிலத்து மக்கட்பேர் ...கரு. (௰௧)

1. னத்தேநெல் வேலியி? 2. வீங்கிவை?



12. சோல்லான் மிகும்பரற் பாலேக் குரிப்போருள் சோல் லின்மினி
நீ ... ... ... ...
எல்லா முணர்ந்தவர் தாமுரைத் தார்க ளிளேயவரைக்
கோல்லா வகைமுலேக் கச்... ... ...
... ... ... விற்றே வெனின் பாலேக் குரிப்பொரு ளறிவித்தலேக் கருதிற்று. என்னே? பிரித லும் பிரிதனிமித் ... ... என்னே?

'வெம்பர லத்தம் வேனில் பின்பனிச்
செம்பகற் குருபபணஞ் சேணிடைப் பிரிதல்
மி... ... ... மி
ரெயின ரெறிபறையணி (?ா) கோள் கொல்குறு[ம்]
பறுநீர் நெல்லியம் பசுங்கா யுரமில்
செந்தெகரு கொற்றொடி பஞ்சுரம் பிறவுந்
திருந்திய பாலேத் திணையது வகையே.'

நடுவு [நிலேத்திணையே நண்பகல்வேனிலொ]டு
முடிவுநிலே மருங்கின் முன்னிய நெறித்தே
—தொல். அகத். 11.

பின்பனி தானு முரித்தென மொழிப
—தொல். அகத். 12.
(௰௨)

13. ... ... ... ...
எ. ... ... ... கரு மயங்கியும் விரப் பெறும். என்னே?

உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே
—தொல். அகத். 15.
(௰௩)

14. ... ... ... ...
... ... ... ... ...
எ... [காரே கூதிர்] முன்பனி பின்பனி

சீரிள வேனில் வேனி லென்றாங்
கிருமூ வகைய பருவ மென்[ப]
[அவைதாம், ஆவணிமுதலா]விரண்டிரண்டாக
மேவிய திங்க ளெண்ணினர் கொளலே.

—திவாகரம்.

என்னு மிலக்கணத்தால், ஆவணியும் புரட்டாசியும் [கார்]; [ஐப்பசி] யுங் கார்த்திகையும் கூதிர்; மார்கழியுந் தையும் முன்பனி; மாசியும் பங்குனியும் பின்பனி; சி[த்திரையும் வைகாசி] யும் இளவேனில்; ஆனியும் ஆடியும் வேனில் என்று அறுவகைப்பட்டவாறுங் கண்டுகொள்க. இனி மூவகைப்ப ... நான்கு திங்கட் கூடியதொரு பருவமாக வென்றவாறு. என்னை? 'ஈரிரு திங்கட் பருவ மொன்றாக

'மூவகையி ... யியரே' என்றாராகலின்.

அவை வருமாறு:—ஆவணியும் புரட்டாசியும் அற்பசியும் கார்த்திகையும் கொண்டது கார்; மார்கழியுந் தையும் மாசியும் பங்குனியும் கொண்டது பனி; சித்திரையும் வைகாசியும் ஆவணியும் (? ஆனியும் ஆடியும்) [கொண்டது வேனில்] (௰௪)

15. ... ... ... ...

இன்னு முன் சொன்ன நிலங்களைக் குறிஞ்சியும் நெய்தலுங் களவென்றும் இவை யிரு தி... பாருமுளர். என்னை?

'குடவரை குறிஞ்சியுங் குணகடல் நெய்தலுங்
கடவத ... ...
... ... ...துதம்மி
லொருதனிக்காத லொழிந்தன வியல்பே'
'நன்னிலை மருதமுந் தென்னிலை முல்லையுந்



துறந்தே'
'உடனிலைப் பாலை யிருவீற்று முரித்தே'

என்றாராகலின். மற்றும் வரும்வழிக் கண்டு ... (௰௫)

16. ... ... ... ...

...றும் என்ப தென்னுதலிற்றோ வெனின், எட்டுமணமு மவற்றிற் குதாரணமு மறிவித்தலைக் கருதிற்று ...[பிர]சாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம், பசாசம் என்றவாறு. ... (௰௬)

17. இருப ... டேழிற்பிர மங்காத்தவந்
கோநபதின் மேலிரண் டாண்டின டன்னை யுவந்தளித்
தருள்வ தறநிலை ய ... ... யதனைப்
பெருமறை யோன்கோலை யொன்றேடோப் பாமென்று
[பேசினரே

என்ப தென்னுதலிற்றோ ... ... (௰௭)

18. ... ... ... ... (௰௮)
19. ... ... ... ... (௰௯)
20. ... ... ... ... (௨௰)
21. ... ... ... ... (௨௧)
22. ... ... ... ...

... ... ... ...கூடிய கூட்டமாகலானும் 'கூட்டக் கூடல் களவிற் கில்லை'யென்னு மிலக்கணத்தாலும் 'உளமாண் பொத்த கிழ... ...தகாமப் புணர்ச்சி' யென்னு மிலக்கணத்தாலும் களவெனப் படாது. களவெனப் படாதாதலா லவ்வியல்பென்னுஞ் ... ... கில்லையென்ற அருத்தாபத்தியாற் களவாகாதோ வென்றாற்கு, அற்றன்று: இக்கூட்டங்கள் கற்புக்கெண்ணப்பட்ட கூட்டங்களாதலால் கற்பெனவும் படாது. அன்றியும் 'களவுங் கற்புங் கைகோ ளாக-

வளவி லன்பி னகமெனப் படுமே'என்னுமிலக்கணத்தாற் ... ... என்றமையா லிக்களவுக்குக் குற்ற மற்றிருப்பதோ ருறுப்பின்மையால் அகமெனவும் படாது. அகப்புறமெனில், அகமாகிய கற்பு அகப்புறமாகிய களவு பின்னுமாகக் களவுமென் றெண்ணுமையி லகப்புற மென வும் படாது. என்னை ?

'முற்படப் புணர[ாது சொல்லி] ன்மையிற்
கற்பெனப் படுவது களவின் வழித்தே'—இறை. 15.

எனவும்,

'ஐந்திணை தழுவி யத்த (? யக)]மெனப் படுவது
கந்திருவ முறைமையிற் களவொடு கற்பே'

என்றூராகலின். என்றமையாலி ..ப்பாற்படுமோ என்பது கடா. அதற்குவிடை பொருளதிகாரத்திற் கண்டு கொள்க. (உஉ)

தெய்வப் புணர்ச்சி[யும் பாங்கனிற்கூட்ட]ஞ்சேவிலிதநந் தையற் புணர்ச்சிப் பகற்குறிதானு மிரவினிற்சார்ந் துய்தற்குறியும் வரைவுகடா வுடன்போக் குணர்வு ... ... [களவோ] டூக் காமமேன்பரே

என் எனின், தமிழ்நெறிவிளக்கத்திற் பொருளியலுடை யாருங் களவொழுக்க மாறுவகைப்படு மென்றூர் அவை யறிவித்தலைக் கரு... ... ...ன. தெய்வப் புணர்ச்சியும் பாங்கற்கூட்டமுந்தோழியாலாயகூட்டத்திற் பகற் குறியும் இரவுக்குறியும் வரைவுகடாதலும் உடன் போக்கு வலித்தலுமென அவ...அறிந்து கொள்க. (உஙு)

24. காட்சியோ டையந் தெளித லெனத்தனி கட்டுரைத்த வேட்கையின் மூன்று மொருதலைக் காமமென ...துந்தோர் மாட்சிமை தோன்று ... களூ மதிநுதல்வேய்த் தோட்சிறு கோங்கரும் பாமென் முலைப்பூண் டுடியிடைபே



என்—எனின், ஒருதலைக் காமமென்னும் அகப்புற... ...ற்று. என்னை ? 'காட்சி முதலாக் கலவியி னொருதலை- வேட்கையிற் றோன்றுதல் கைக்கிளை யதுதான் - கேட் போ ரில்லாக் கிளவிய தாகும்' என்றூராகலின். என்னை ? காட்சி யையந் தெளித லென. இவற்றுள் காட்சி யென் பது:

மால்வரை புரையு மாடக் கூட
லால வாயிற் பா[ல்புரை பசுங்கதிர்க்]
[கு]ழவி[த்திங்]களைக் குறுங்கண்ணி யாக வுடைய
அழலவிர் சோதி யருமறைக் கடவுளாற்

செய்யப்பட்ட பொருளதிகாரத்தின் பொருட்டிறம்... முகு......ங்கிய தலைமகன் தெய்வ மிடைநிற்கப் பான்மை யா லுய்க்கப்பட்டுக் *கற்கந்து மெறிபோத்துங் கடுங்கண் யானையுந் தறுகட்பன்றியுங் கருவ......லிடைவிராய்த் தனியவரை முனிவுசெய்யும் பொழிலது நடுவணதோர் மாணிக்கச் செய்குன்றின்மேல் விசும்புது[டைத்துப் பசும்பொன்]பூத்து வண்டு துவைப்பத் தண்டேன் துளிப் பதோர் வெறியுறு நறுமலர் வேங்கைகண்டாள்; கண்டு பெரிய [தோர் காதற் களிகூரத்]...........தன் செம் மலர்ச் சீறடிமேற் சிலம்பு கிடந்து சிலம்புபுடைப்ப, அம் மணிக்கொம்பர் நடைகற்பதென நடந்து சென்று நாண் மலர் கொய்தாள்; கொய்து மரகத விளிம்படுத்த மாணிக் கச்சுனை மருங்கினதோர் மாதவி வல்லிமண்டபத்துப் போதுறு கொழுநிழற்கீழ்க் கடிக்குருக்கத்திக் கொடிப் பிடித்துத் தகடுபடு பசும்பொற் சிகரங்களின் முகடு தொடுத்து நான்றுவந்திழிதரும் [அருவி பொன்]......

* இறையனா ரகப்பொருளுரை, 38-39-ம் பக்கங்கள் பார்க்க (பவானந்தர் பதிப்பு).

கொழித்து மணிவரன்றி மரகதத்தொடு வயிரமுந்தி யணிகிளரு மாடகப்பாறைமே லதிர்குரன் முரசின் கண்ணிரட் [டவண்டு]ந் தேனும் யாழ்முரல வரிக்குயில்க ளிசைபாடத் தண்டாது தவிசுப்படப் போர்க்க........ ........[பளிக்] குப்பாறை மணித்தலத்துமிசை நீலவால வட்டம் விரித்தாற்......போலவும் தலைப்பெய் தொருவ ரொருவர் நிமித்தமாகத் தமியராயெதிர்ப்படும். என்னை ?

சுரும்பின பூம்பொழிற் சுடர்வேற் காளை
கருந்தடங் கண்ணியைக் கண்டுமகிழ்ந் தன்று

—வெண்பாமாலை - 11, 1.

என்றாராகலின். அதற்குச் செய்யுள்:—

திருவளர் தாமரை சீர்வளர்
காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையோர் வல்லியி
னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக்
கொடிபோன் றொளிர்கின்றதே.

—திருக்கோவை - 1.

பூமரு கண்ணிணை வ[ண்டாப்
புணர்]மென் முலையரும்பாத்
தேமரு செவ்வாய் தளிராச்
செருச்செந்நி லத்தைவென்ற
மாமரு தா[னையெங் கோன்வை]யை
வார்பொழி லேர்மணந்த
காமரு பூங்கொடி கண்டே
களித்தவெங் கண்ணிணையே.

—பாண்டிக்கோவை.



[ஐயம் ஐயமாக வுள்ளது.]

தெளிதல்:—தலைமகளைக் கண்ணிமைத்தன் முதலாகிய கருவிகளால் மானிட மெனத் தெளிதல். என்னை ?

[மாநிலத் தியலு மாத]ராமெனத்
தூய்மலர்க் கோதையைத் துணிவுரைத்தன்று

—வெண்பாமாலை - 11, 3.

என்றாராகலின். அதற்குச்செய்யுள் வருமாறு:—

பாயும் விடையரன் றில்லையன் னாள்படைக் கண்ணிமைக்
தோயு நிலத்தடி தூமலர் வாடுந் துயரமெய்தி [குன்
யாயு மனனே யணங்கல்ல ளம்மா முலைசுமந்து
தேயு மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே.

—திருக்கோவை - 3.

தொடிவா னரம[ங்]கை யன்றிமைக் குங்கண்கள் தோயு
தடிவா னரந்த மலரும் புலரு மயன்றலையைத் [நிலத்
தடிவா னரன். தாழ்சடை யோன்றில்லை யூசல்வல்லிக்
கொடிவா னரம்புரி யும்பொழில் வாய்வந்த கோல்வளையே

—தில்லையந்தாதி.

பாவடி யானைப் பராங்குசன் பாழிப் பகைதணித்த
தூவடிவேன்மன்னன் கன்னித் துறைச்சுரும் பார்குவளைப்
பூவடி வாணெடுங் கண்ணு மிமைத்தன பூமிதன்மேற்
சேவடிதோய்வகண் டேன்றெய்வமல்லளிச்சே[யிழையே]

—பாண்டிக்கோவை.

திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலமுஞ் சேவடியுந் தோயு—மரிபரந்த
போகித முண்க ணிமைக்கு
மாகு மற்றிவ் ளகலிடத் தணங்கே

—வெண்பாமாலை - 11, 3.

கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குல் மேதகு சாயலா
ளென்ன் பிறர்மகளா மாறு. —பழம்பாட்டு.

அணங்[கென்ன]லாமோ வடியிரண்டு மண்மே
விணங்குங் குழையுடனே யேறிப்—பிணங்கிக்
குவளை விழியிமைக்குங் கொய்[மல]ர்த்தார் வாடு
மிவளை மடநெஞ்சே யாம். —கிளவித்தெளிவு.

'கைக்கிளை......பெருந்திணை யென்றூங்—கத்திணை யிரண்டு மகத்திணைப் புறனே' என்றமையால் இவை மூன்றும் அகப்புறமானபடி யறிக. (உச)

25. இடையா நயப்புப் பிரிவையுணர்த்த லிடமணித்...
...டைமாற லெய்தற் கருமை யுயிரே யெனவியத்தல்
படையார்விழிப் பாங்கியையுணர்தல் பாங்கனை நினைதல்
அடைவானவேழவகை[யே] புணர்ச்சி யென்றக்கினரே.

என் - னின், உரைத்த முறையானே இயற்கைப் புணர்ச்சி யெழுவகைப்பட்ட கிளவியா மென்ப தறிவித்த லைக் கருதிற்று. என்னை? நயப்பும், பிரிவுணர்த்தலும், இட மணித்தென்றலும், எய்துதற்கருமையும், உயிரென வியத்தலும், பாங்கியை யுணர்தலும், பாங்கனை நினைதலும் என்றவாறு. அவையாவன:—நயப்பு எ-து. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் றலைமகள் கேட்ப விருப் புரைத் தயர்வு நீங்குதல். என்னை?

அழிவுபட ரெவ்வங் கூர வாயிழை
பழிதீர் நன்னலம் பாராட் டின்று
—வெண்பாமாலை - 16, 6.

என்றூராகலின். அதற்குச் செய்யுள் வருமாறு:—



கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுரு கக்குனிக்கும்
பாம்பலங் காரப் பரன்றில்லை யம்பலம் பாடலரிற்
றேம்பலஞ் சிற்றிடை யீங்கிவ டீங்கனி வாய்கமழு
மாம்பலம் போதுள வோவளி காணும் மகன்பணையே.
—திருக்கோவை - 11.

வேறும் மெனநின் றிகல்மலைந்
தார் [விழிஞத்துவிண்போ
யேறுந் திற] ங்கண்ட கோன்றென்
பொதியி லிரும்பொழில்வாய்த்
தேறுந் தகையவண் டேசொல்லு
மெல்லியல் செ [ந்துவர்வாய்
நாறுந் தகைமை] ய வேயரக்
காம்பல் நறுமலரே.
—பாண்டிக்கோவை.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோநீ யறியும் பூவே.
—குறுந்தொகை - 2.

கழுநீர்பூத் தோரு...... ருபூந் தொண்டை
முழுநீர முத்த மரும்பி—யெழுநீர்
இளம்பிறையுஞ் சூடி யெழிற்கமல முண்டே[ல்]
விளம்புவாய் நீவண்டே வேறு.
—கிளவிமாலை.

உள்ள படியுரையும் வண்டினங்கா ளோடைதொறுந்
தெள்ளி நறவந் திசைபர (ா) க்கும்—வெள்ள
வயல்கிடந்த [தா] மரைமேல் மையெழுதுஞ் செய்ய
கயல்கிடந்த துண்டாகிற் கண்டு. —கிளவித்தெளிவு.

பிரிவுணர்த்தலென்பது தலைவியை நீங்கரி........ன்னிற் பிரியேன் பிரியினு மாற்றேனென்பதுபடச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

சிந்தா மணிதென் கடலமு தந்தில்லை யானருளால்
வந்தா லிகழப் படுமே மடமான் விழிமயிலே
யந்தா மரையன்ன மேனின்னை யானகன் றாற்றுவனோ
சிந்தா குலமுற்றென் னோவென்னை வாட்டந் திருத்து
[வதே.

—திருக்கோவை - 12.

மின்னிற் பொலிந்தசெவ் வேல்வலத்
தால்விழி ஞத்தெதிர்ந்த
மன்ன[ற்கு] வானங் கொடுத்தசெங்
கோன்மன்னன் வஞ்சியன்னாய்
நின்னிற் பிரியேன் பிரியினு
மாற்றேன் நெடும்பணைத்தோள்
பொன்னிற் பசந்துமெய் வாடியென்
னுங்கொல் புலம்புவதே.

—பாண்டிக்கோவை.

இனையல் வாழி பிரிவொன் றிலனே
நனைமலர் நறும்பூங் கோதை
யமைவெனு......நா னகன்ற ஞான்றே.

—பொருளியல்.

குவளை நாறுங் குவையிருங் கூந்தல்
ஆம்ப னாறுந் தேம்பொதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரை[க்] கொங்கி னன்ன
நுண்பஃ றுத்தி மாஅ யோளே



[நீயே,]அஞ்ச லென்றவென் சொல்லஞ் சலையே
யானே, குறுங்கா லன்னங் குவவுமணற்[சே]க்குங்
கடல்சூழ் மண்டலம் பெறினும்
விடல்சூ ழலனே நின்னுடை நட்பே.

—குறுந்தொகை - 300.

நின்னிற் பிரிந்தியா னாற்றுவனோ நின்மே[னி]
பொன்னிற் பசந்து புலம்புவதென் - தன்னின்
மயிர்பிரிந்தா லென்னாகு மானமா மாயு
முயிர்பிரிந்தா லென்னா முடம்பு.

—கிளவித்தெளிவு.

இடமணித்தென்ற லென்பது பிரியநினைந்த தலைமகன் இடம் அணித்தென்றல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

வருங்குன்ற மொன் றுரித் தோன்றில்லை
யம்பல வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி
யேயிட ரெய்தலெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்கள
பத்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக
மேய்க்குங் கனங்குழையே.

—திருக்கோவை ௲15.

பாவணை யுந்த[மிழ் வேந்]தன் பராங்குசன் பாழிவென்ற
வேலணை வெஞ்சிலை யான்வஞ்சி யன்னா யினையலெம்மூர்த்
தூவண மாடச் சுடர்தோய் நெடு[ங்]கொடி துன்னிநும்மூர்
ஆவண வீதியெல் லாநிழல் பாயுநின் றன்வருமே.

—பாண்டிக்கோவை.

நிலவென விளங்கிய நின்...யொளியாரத்
திளமுலை பாராட்டி யிரங்குவ தெவனோ
வறுமையொடு சென்றோற் கருள்முகங் காட்டி
மறுப்பதை யறியா வெ...வற்
கறத்தொடு புகழென வணிய நம்மூரே.

—பொருளியல்.

இனையல் வாழி யெம்மூர் மலர்ந்த
பழனத் தாமரை கெழீஇ வ[ண்டு]நின்
கண்ணென மலர்ந்த காமர் சுனைமலர்
ந(றுங்க)ண்ணி நாளு நலனுக ரும்மே.

—சிற்றெட்டகம்.

நெடுவே றுட[க்]கியநீர் நீ[க்கு]மதி காதல்
வடிவே றுடக்கியநீர் மாதோ—நெடுவேய்க்
கணமா மழைக்குவட்டெங் கார்வரைப்பூஞ் சாரல்
மணநாறு [நின்வரை]மேல் வந்து.

—அகத்திணை.

நின்னுடைய கூந்த னிறத்தால் நிறைவளையா
யென்னுடைய வூரு மிருளாகு—நின்னுடைய
முத்[னைய]வெள்ளை முறுவலா லென்மலைய
மத்தனையும் வெள்ளைநில வாம்.

—கிளவித்தெளிவு.

எய்துதற் கருமையென்பது புணர்ந்து நீங்கிய தலைமக னயவெள்ளத்துட் கண்ட தலைமகளை யரிய ளென்பதுபடச் சொல்லுதல். என்னை?

கொய்தழை யல்குல் கூட்டம் வேண்டி
யெய்துதற் கருமையி னிறப்பப் புகழ்ந்தன்று

—வெண்பாமாலை - 11, 7.



என்றாராகலின். அதற்குச் செய்யுள் வருமாறு:—

புணர்ப்போ னிலனும் விசும்பும்
பொருப்புந்தன் பூங்கழலின்
றுணர்ப்போ தெனக்கணி யாக்குந்தொல்
லோன்றில்லைச் சூழ்பொழில்வாய்
இணர்ப்போ தணிகுழ லேழைதன்
னீர்மையி னீர்மையென்றாற்
புணர்ப்போ கனவோ பிறிதோ
வறியேன் புகுந்ததுவே.

—திருக்கோவை - 17.

இருநிலங் காரண மாக நறையாற் றிகன்மலைந்தார்
பொருநிலவேந் தரைப் பொன்னுலகாள்வித்த பூமுகவேற்
[கின்
பெருநிலங்க[ாவலன்றெ]ன்புன னாடன்னபெண் ணணங்
திருநலஞ்சேர்ந்ததெல் லாங்கனவேயென் றுசிந்திப்பனே.

—பாண்டிக்கோவை.

... ... ...

கலைமதி வாய்மைக் கலுழ்(ா)பா வழிவருங் கற்பமைந்த
தலைமைய ரேழ்பெருந் தேரங்க மும்பெற் றநநதசச
[மலையனமா] மதில் வச்சிர நாடன்ன வாணுதறன்
முலையிணை தோய்ந்ததெல் லாங்கன வேயென்று
[முன்னுவனே.

—பல்சந்தமாலை.

[மனவே ரல்குன்] மடந்தை கூட்டங்
கனவே தேரின் யாவது
நனவே யாயினு நண்ணலோ வரிதே.

—பொருளியல்

உயிரெனவியத்தலென்பது தலைவியிடத்துவைத்த ஆதரவின் மிகுதியாலே தனதுயிரென வியத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு :—

நேயத்த தாய்நென்ன லென்னைப்
புணர்ந்துநெஞ் சந்நெகப்போ
யாயத்த தாயமு தாயணங்
காயர னம்பலம்போற்
றேயத்த தாயின்றென் சிந்தைய
தாய்த்தெரிந் தாற்பெரிது
மாயத்த தாகியு தோவந்து
நின்றதென் மன்னுயிரே. —திருக்கோவை-39.

இன்னுயிர் கண்டறி வாரில்லை
யென்ப ரிகன்மலைந்தா[ர்]
மன்னுயிர் வான்சென் றடையக்
கடையலுள் வென்றுவையந்
தன்னுயிர் போ[னி]ன்று காக்குமெங்
கோன்கொல்லித் தாழ்பொழில்வாய்
என்னுயி ராயத் திடையிது
போய்நின் றியங்குவதே. —பாண்டிக்கோவை.

புலனின்றென்ப வின்னுயி ரிதுவே
யலர்முலை யாயத் தாங்க
ணிலவொளி மதியென நிலவுமென் னுயிரே.
—பொருளியல்.

கொன்[னிலை]யோர் யாக்கைக்குக் கூடியிரோ வொன்[றென்ப
ரென்னுயி ரோரிரண்டா யான்கண்டேன்—மின்னுகலைப்
பைம்மலைத்[த வ]ல்குற்றுப் பாடகக்காற் றென்றென்று
வெம்முலைத்து வேல்போல் விழித்து. —அகத்திணை.



என்னுயிர் நான்கண் டிளமுலையும் வேய்த்தோளும்
பொன்னிறமுங் கொண்டு புனமயில்போல்—மன்னி
வயங்குகின்ற நெய்தல்வாய் வ.........ன் வெற்பி
லியங்குகின்ற தாயத் திடை. —கிளவிவிளக்கம்.

கண்ணினாற் றம்முயிரைக் கண்டறிவா ரில்லென்பர்
[கண்ணினா]லென்னுயிரைக் கண்டேனான்-கண்ணினால்
மானெக்குஞ் சாயல் மயி.
—கிளவித்தெளிவு.

பாங்கியையுணர்தலென்பது தலைமகளைத் தனதுயிரென ...ணர்ந்து இவள் போலு மிவட்குச் சிறந்தாளென...... *...ளவைத்தெனக் கெவ்விடத்துந் தோழியென்னுருயிரென்பது.

[அதற்குச் செய்யுள் வருமாறு:—]

[உயிரொன் றுளமுமொன் றொன்றே
சிறப்]பிவட் கென்றொடென்னப்
பயில்கின்ற சென்று [செவியுற
நீள்படைக் கண்கள்விண்வாய்ச்
செயிரொன்று முப்புரஞ் செற்றவ]ன்
றில்லைச்சிற் றம்பலத்துப்
பயில்கின்ற கூத்த னருளென
லாகும் பணிமொழியே. —திருக்கோவை-18.

.....................காட்டுஞ்செ...............[பொ]ழில்சூழ்
கோழியும் வானவன்......................................
.........................கொண்டவன் வண்டறைதார்ப்
பூழியன் மாற்றை காரனை யாள்படைப் போர்விழியே.
—பாண்டிக்கோவை.

---

* தொன்னூல்-நிலயப் பிரதியில் இது 'உயிரொன்று' என்பதன் பின்.

[நோ]க்கினும் பிறர்முக நோக்காள் சாரினும்
பூக்குழன் மடந்தை தோள்சா ரும்மே
யன்ன தலையளி யுடைமை [யி]
னின்னுயிர்த் தோழி யேந்திழை யிவட்கே.

—பொருளியல்.

பாங்கனை நினைதலென்பது இவ்வகைப் பாங்கியை யுணர்ந்து ஆற்ருஞகிய தலைவன் பாங்கனைநினைந்து ஆற்றுதல். அதற்குச் செய்யுள் வருமாறு :—

பூங்கனை யார்புனற் றென்புலி
யூர்ப்புரிந் தம்பலத்து
ளாங்கெனை யாண்டுகொண் டாடும்
பிரானடித் தாமரைக்கே
பாங்கனை யானன்ன பண்பனைக்
கண்டிப் பரிசுரைத்தா
லீங்கெனை யார்தடுப் பார்மடப்
பாவையை யெய்துதற்கே.

—திருக்கோவை-19.

கயலணி யார்கழற் காவல
ரோடக் கடையல்வென்ற
வயலணி வேலரி கேசரி யொனரு
ரெனபது...............
னுயிரனை யான்றனைக் கண்டுரை
செய்தா லொழிதலுண்டே
குயின்மொழி யாடனைச் சென்றியா
னின்னமுங் கூடுதலே.

—பாண்டிக்கோவை.



உடையை வாழி நெஞ்சே யிடைக்கொண்
டழுங்க லோம்புமதி தழங்கொலி மிகுநீர்
வழுத்தூர் காக்கு ம[ா] புணை
விழுத்துணைக் [கா]ன்ற மிகுபெருங் கிளையே.

—பொருளியல்.

இவையெல்லாம்

‘அதுவே, தானே யவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல்’ —இறை - 2.

என்னு மிலக்கணத்துட் கண்டுகொள்க. இயற்கைப் புணர்ச்சி முற்றும். (உ௫)

26. ஆக்கிய சீருற் றதுவினு வாங்கவ னுற்றதுரை
வாக்[கினி]...யான்முன் கழற லதனை யெதிர்மறுத்தல்
தாக்கமர் பாங்கன் றனதுளந் தானே தனைவரைத்தல்
வீக்கமழ் தாழ்பொழில் சூழி[ட]ந் தன்னைவினவுதலே.

27. வினவுந் தகைமை யிடத்தியல் கூறல் மிகவிளங்கச்
சொனநன்குறிவழிச் சேறலிடங்கண்டு தான்[றுணிதல்]
...கொண்டிறைவனைத் தானேவியத்தலெழில்சிறந்த
வனிநின் றிடுநிலை கூற லவையவந் தேறுதலே.

28. தேறும்போ[ழிறனைக்கண்டு]வியத்தல்திருவேயெனல்
மாறும் படியன்றி யாற்றன் கிளத்தல் மருங்கணைதல்
ஊறும் புணர்ச்சி மகிழ்த லிருத்த[லென் றெண்புலவோர்]
கூறுங் கிளவிக ளீரோன் பதுபாங்கன் கூட்டிடமே.

இச்சூத்திரமூன்று மென்னுதலிற்ருேவெனின், பாங்கற் கூட்டம் பத்து (?பதினெட்டு) வகைப்பட்ட கிளவியா மென்பதறிவித்தலைக் கருதிற்று. என்னை ? உற்றது விஞதலும், உற்ற துரைத்தலும், கழறலும், கழற்றெதிருரைத்தலும், உளங்கவன் றுரைத்தலும், இடம் விஞதலும்,

இடத்தியல் புரைத்தலும், குறிவழிச் சேறலும், இடங் கண்டு துணிதலும், இறைவியை (? இறைவனை) வியத்தலும், நிலைகூறுகிளவியும், அவ்வையவந்தேறலும், பொழில் கண்டு வியத்தலும், திருவெனவுரைத்தலும், ஆற்றூன் கிளத்தலும், மருங்கணைதலும், புணர்ச்சிமகிழ்தலும், வெறுத்தலும் (?இருத்தலும்) என்றவாறு. அவற்றுள், உற்றதுவினாத லென்பது பிரிந்த தலைமகன் வேறுபாடு கண்டு பாங்கன் வினாதல். அதற்குச் செய்யுள்:—

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்
பலத்துமென் சிந்தையுள்ளு
முறைவா [னுயர்] மதிற் கூடலி
னாய்ந்தவொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி
யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்
கொலாம்புகுந் தெய்தியதே.

—திருக்கோவை - 20.

* * *

[வளைவளர் தருதுறையே மணம்விரி தருபொழிலே]
தளையவிழ் நறுமலரே தனியவ டிரியிடமே
முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே
இளையவ ளிளமுலையே யெனையிடர் செய்தவையே.

—சிலப்பதிகாரம் - கானல். 16.

---

* 'இருபத்து மூன்றாவது இலக்கமிட்ட ஏடு இல்லை' என்று தொன்னூல்-நிலையக் கையெழுத்துப்பிரதி.



சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை
கான யானை யணங்கி யாஅங்
கிளையள் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் [கை]யளெம் மணங்கி யோளே.

—குறுந்தொகை - 119.

எலுவ சிறாஅ ரேமமுறு நண்ப
புலவ தோழ கேளா யத்தை
மாக்கட னடுவண் ணெண்ணாட் [பக்கத்துப்
பகுவெண் டிங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்று லெம்மே.]

—குறுந்தொகை - 129.

......னகூத்த......
னரும்பிக் குரும்பைமுலை யன்னத்தை யின்சொற்
கரும்பைப் பெரும்புனத்தே கண்டு — தெரிந்துழுப்ப
தன்புபை................ரரிசிதறி நீளியவாய்க் [பெரிய
கொன்பயிலும் வேல்பொற் குழைபொரு[து]ந்-தன்
மைக்கொண்ட காவி மலர்விழியா லென்னறிவைக்
[கைக்0]க[ா]ண்ட தோரிளமான் கன்று.

—கிளவித்தெளிவு.

கழறலென்பது தலைவனுக் குற்றது கேட்ட பாங்கன் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

உளமாம் வகைநம்மை யுய்யவந்
தாண்டுசென் றம்பருய்யக்
களமாம் விடமமு தாக்கிய
தில்லைத்தொல் லோன்கயிலை

வளமாம் பொதும்பரின் வஞ்சித்து
நின்றோர்வஞ் சிம்மருங்கு
விளமான் விழித்ததென் றேவின்றெம்
மண்ண விரங்கியதே.

—திருக்கோவை - 22.

ஆய்கின்ற தீந்தமிழ் வேந்த
னரிகே சரியணிவான்
றேய்கின்ற முத்தக் குடைமன்னன்
கொல்லியஞ் சூழ்பொழில்வா
யே[ய்]கின்ற வாயத் திடையொ
ரிளங்கொடி கண்டெனுள்ளந்
தேய்கின்ற தென்ப தழகிதன்
றேவென் சிலம்பனுக்கே.

—பாண்டிக்கோவை.

பொருந்தா [த]ம்ம புனையிழை மடந்தை
முருந்தேர் முறுவ னேக்கின்
வருந்தின னென்பது பெருந்தகை பெரிதே.

—பொருளியல்.

தேன்கு முல்லை சொரிய விடைநின்று
மீன[கு] வாண்மதிபோல் வெண்கூதம்—தான் [விரியும்
கானக நாட கடனே மடனேக்கி
யான திணையு மென[ல்].

—இன்னிசைமாலை.

தேயு மருங்குலாள் சேல[னை]ய கண்கண்டு
நீயு நெறிதளர்ந்து நிற்றியா—லாயு
மறிவெங்கே யல்லா லருங்குணங்க ளான
செறிவெங்கே திண்சிலம்பா செப்பு.

—களவித்தெளிவு.



கழற்றெதிர்மறை யென்பது பாங்கன்கழறத்தலைமகன் எதிர்மறுத்தல். அதற்குச் செய்யுள்:—

சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத்
தில்லைச்சிற் றம்பலத்து
மாணிக்கக் கூத்தன் வடவான்
கயிலை மயிலைமன்னும்
பூணிற் பொலிகொங்கை யாவியை
யோவியப் பொற்கொழுந்தைக்
காணிற் கழறலை கண்டிலை
மென்றோட் கரும்பினையே.

—திருக்கோவை - 23.

மண்கொண்டு வாழ வலித்துவந் தார்தம் மதனழிந்து
புண்கொண்டு நீர்மூழ்கப் பூலந்தை வென்றான் புகாரனைய
பண்கொண்டசொல்லம்மடந்தை முகத்தபைம்பூங்குவளை
கண்கண்ட பின்னை யுரையீ ருரைத்தவிக் கட்டுரையே.[க்

—பாண்டிக்கோவை.

விண்டலங் கெஃகொடு வேணு[ட்]
டெதிர்நின்ற வேந்தவித்தி[ம்]
மண்டலங் காக்கின்ற மான்றேர்
வரோதயன் வஞ்சியன்னாள்
குண்டலஞ் சேர்ந்த மதிவாண்
முகத்த கொழுங்கயற்கண்
கண்டிலிர் கண்டா லுரையீ
ருரைத்தவிக் கட்டுரையே.

—பாண்டிக்கோவை.

நிணங்கொள் புலாலுணங்க னின்றுபுள்
ளோப்புத றலைக்கீ டாகக்
கணங்[கொ]க[ா]ள்வண் டார்த்துலாங்
கன்[னி நறு]ஞாழல் கையி லேந்தி

மணங்கமழ் பூங்கானன்
மன்னிமற் றுண்டோ
ரணங்குறையு மென்ப தறியே
னறிவேனே லடையே[ன் மன்னே].

—சிலப்பதிகாரம் - கானல் 9.

அம்ம வாழி கேளிர் முன்னின்று
கண்டனி ராயிற் கழறலிர் மன்னோ
நுண்டாது பொதிந்த செங்காற்[கொழுமுகை]
முண்டகங் கெழீஇய மோட்டுமண லடைகரைப்
பேஎய்த் தலைஇய பிணரரைத் தாழை
யெயிறுடை நெடுந்தோடு காப்பப் [பலவுடன்]
வயிறுடைப் போது வாலிதின் விரியப்
புலவுப்பொரு தழித்த பூநாறு பரப்பி
னிவர்திரை தந்த வீர்ங்கதிர் முத்தங்
கவர்நடைப் புரவி[க் கால்]வடுத் தபுக்கு
நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை
வண்டுவாய் திறந்த வாங்குகழி நெய்தற்
போதுபுறக் கொடுத்த வுண்கண்
மா[தர்]வாண்முக மதைஇய நோக்கே.

—நெடுந்தொகை - 130.

இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே.

—குறுந்தொகை - 58.



நயனு நன்று நாணுநன் குடை[மை]யும்
பயனும் பண்பும் பாடிறந் (? பாடறிந்)தொழுகலு
நும்மிலு மறிவென் மன்னே தம்மென
வெதிர்த்த துத்தி யேரிள வனமுலை
விதிர்த்துவிட் டன்ன வந்நுண் மருங்கு
லேம்பால் வகுத்த கூந்தற் செம்பொற்
றிருநுதல் பொறி[த்]த தேம்பா யோதி
முதுநீ ரிலஞ்சி பூத்த குவளை
யெதிர்மலர்ப் பிணைய லன்னவ
ளரிமதர் மழைக்கண் காணு வூங்கே.

—நற்றிணை - 160.

* *

[வல்லிச் சிறுமருங் குற்பெருந் தோண்மட வார்வடிக்கண்
புல்லிப் பிரிந்தறி யாதமந் தாரத்தெங் கோன்புன]னுட்
டல்லித் தடந்தா மரைமல ரோவவன் றன்னணி [யார்னை
கொல்லிக்குடவரையோவண்ணல்கண்டதக்கொம்பி [யே

—பாண்டிக்கோவை.

கரங்குவித்த கண்ணுகா நண்ணுதல...
... ... ... ...
[அரங்குவி]த்த செவ்வேலா யஞ்சாத நின்னை
யிரங்குவித்த மாத ரிடம்.

—இன்னி[சைமாலை]

... ழ லண்ணல் நெஞ்ச
மாழ்துய ரெய்த வணங்கிய வணங்கே

—பொருளியல்.

... ... ... (உசு)

* 'இருபத்தாறு மிலக்கமிட்ட ஏடு இல்லை' என்று தொன்னூல்-நிலையக் கைஎழுத்துப் பிரதி.

ழிம்பரோ யாதோ விடம்வடிவு—கொம்பரோ
வண்ண மயிலோ கிளியோ மலைநாட

... ... ... ...

—கிளவித்தெளிவு.

இடத்தியல்புரைத்தல் என்பது பாங்கற்குத் தலைமகன் கண்ட விடமும் வடிவும்[உரைத்தல். அதற்குச் செய்யுள்] வருமாறு:—

விழியாற் பிணையாம் விளங்கிய லான்மயி லாமிழற்று
மொழியாற் கிளியா முது[வா னவர்த முடித்தொகைகள்]
கழியாக்கழற்றில்லைக் கூத்தன்கயிலைமுத்தம் மலைத்தேன்
கொழியாத்திகழும்பொழிற்கெ[ழிலாமெங்குலதெய்வமே]

—திருக்கோவை - 29.

ஒத்த மயிற் குலமுமெழிற் ஞெளி வாணகைக்கு
முத்த மயிற்கில முல்லைகொ லோ.........
.........ற்குலவாளிற் கொய்த வரங்கர் குன்றிற்
சுத்த மயிற்குல மாமியல் பார்க்கிலத் தாய்நகைக்கே.

—கோயிலந்தாதி ?

அடிவண்ணந் தாமரை யாடர
வல்கு லரத்தமங்கை
கொடிவண்ண நுண்ணிடை கொவ்வைச்செவ்
வாய்கொங்கை கோங்கரும்பின்
படிவண்ணஞ் செங்கோற் பராங்குசன்
கொல்லிப் பனிவரைவாய்
வடிவண்ண வேற்கண்ணி ஞலென்னை
வாட்டிய வாணுதற்கே.

—பாண்டிக்கோவை.



திருமா முகந்திங்கள் செங்கய
லுண்கண்செம் பொற்சுணங்கோர்
வரமா முலைமணி[ச் செப்பிணை
வானவன் கானமுன்]னக்
குருமா நெடுமெதிற் கோட்டாற்
றரண்கொண்ட தென்னன்[கன்னிப்
பெருமான் வரோதயன் கொல்லியஞ்]
சாரலப் பெண்கொடிக்கே.

—பாண்டிக்கோவை.

குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர மகளிர் புரையுஞ் சாயல
ளைய ளரும்பிய முலையள்
செய்ய வாயள் மார்பின சுணங்கே.

—ஐங்குறுநூறு - 255.

இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே
நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே
ஆடமைத் தோளி கூடலு மணங்கே
யரிமதர் மழைக்கணு மணங்கே
திருநுதற் பொறித்[த] திலதமு மணங்கே.

—காரிகைச்செய்யுள்.

அம்ம் பவள்ள் வரிநெடுங்க ணுய்வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குற் கோங்கி
னரும்ம் பவள்முலை யொக்குமே யொக்குங்
கரும்ம் பவள்வாயிற் சொல்.

—பழம்பாட்டு.

காதுடனே காதுங் கயலிரண்டுஞ் செங்கமலப்
போதுடனே நின்று புடைபெயரத்—தாதுடனே
வண்டாடுஞ் சோலை மயில்போல் வரிப்பந்து
கொண்டாட நான்கண்டேன் கொம்பு.

—கிளவித்தெளிவு.

கொங்கை யரும்பாக் குழலளகம் வண்டாக
[அங்கை]தளிராக் வலர்விழியாத்—திங்கள்
குளிருந் தரளக் குடைக்கண்டன் கொல்லி
யொளி[த]ருங் கொம்பொன் றுளது.

—[கண்டன] லங்காரம்.

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

—காமத்துப்பால் - 1113.

குறிவழிச்சேறல் என்பது இடத்தியல்புரைப்பக்கேட்ட பாங்கன் அவ் விடநோக்கிச் சேறல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

குயிலைச் சிலம்படிக் கொம்பினைத்
தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங்
காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய்
வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்படு (? பெதிர்) கூய்ப்பெண்ணை
நண்ணும் பளிக்கறையே.

—திருக்கோவை - 30.

பொன்னங் கனைகழற் பூழியன் பூலந்தைப் போர்மலைந்த
தென்னன் பொதியிற்செழும்புனங் காக்குஞ் சிலைநுதற்பூ
ணன்னந் தனையா ரணங்கினை யாடமைத் தோளியையேழ்
மன்னுங் கடலமு தந்தனைக் கண்டு வருகுவனே.

—பாண்டிக்கோவை.

தோகை மயிலைச் சுரும்பார் குழலணங்கைப் [ஞ்
பாகை யனையமொழிப் பைந்தொடியை—யோகைமிகு
சோலைக்கண் வெற்ப துடியிடையை யான்கண்டு
மாலைக்கு முன்னே வர.

—பழம்பாட்டு.



இடங்கண்டு துணிதலென்பது தலைமகன் கூறின குறிவழிச்(சேறலைப்)(? சென்ற) பாங்கன் இடத்தெதிர்பட்டுத் துணிதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

வடிக்கண் ணிவைவஞ்சி யஞ்சு
மிடையிது வாய்பவளந்
துடிக்கின்ற [வா]வெற்பன் சொற்பரி
சேயான் றொடர்ந்துவிடா
வடிச்சந்த மாமல ரண்ணல்விண்
ணோர்வணங் கம்பலம்போற்
படிச்சந் தமுமிது வேயிவ
ளேயப் பணிமொழியே.

—திருக்கோவை - 32.

தண்டா தலர்கண்ணியண்ணறன் னுள்ளந்தளர்[வுசெய்த]
வண்டார் குழலவளேயிவள் மானீர் மணற்றிமங்கை
விண்டா ருடற்குன்ற மேறி விழிகட் கழுநூறங்கக்
கண்டான் பொதியி லி[துவே யவன்சொ]ன்ன
[கார்ப்புனமே.

—பாண்டிக்கோவை.

சினமும ழிந்து செருவிடைத் தோற்றதெவ் வேந்தர்கள்
[போய்க்
கனவும் படிகடை யற்[செற்ற வேந்தன்] கருங்குழலார்
மனமும் வடிக்கண்ணுந் தங்குமந் தாரத்தெம் மன்னன்
[கொல்லிப்
புனமு மிதுவே யிவளே[யவன்கண்ட பூங்கொடி]யே.

—பாண்டிக்கோவை.

வேங்கை யொள்வீ காந்தள் கமழு[ம்]
பூந்தண் சாரலு மிதுவே யேந்திலை
யயில்வே லந்....யல் வண்ணமு மிதுவே.

—போநளியல்.

ஏ...வாடட......ய ளிவ்வாட்ட
மவ்வாட்டந் தேர்வாட்டு............ட்டு
மிங்கிவன் ருனிங் கிவளு மிவ்வையி
னின்றவனற ளுண்மைக் களவு.—சிற்[றெ]றட்டகம்.
..............டபைந்தடமுமிப் பனித்தடமே
கொந்தரும்பு.........கமிவளே களிவண்டுமேவும்
சுரிகூ............ —[...............]

[வியத்]தலென்பது குறியிடத்துச் சென்ற பாங்கன் றலைவனை வியத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

குவளை[க் களத்தம் பலவன் குரைகழல் போற்]கமலத்
தவளைப் பயங்கர மாக்கிநின் ருண்ட வ[வயவத்தி
னிவளைக்]கண் டிங்குநின் றங்குவந் தத்துணை யும்பகர்ந்[த
கவளக் களிற்றண்ண லே] திண்ணி யானிக் கடலிடத்தே.

—திருக்கோவை - 33.

இருநெடுந் தோளண்ண லேபெரி
யான்வல்லத் தேற்றதெவ்வர்
வருநெடுந் தானையை வாட்டிய
கோன்கொல்லி மால்வரைவாய்த்
திருநெடும் பாவை யனையவள்
செந்தா மரைமுகத்த
கருநெடுங் கண்கண்டு மாற்றிவந்
தாமெம்மைக் கண்ணுதற்கே.

—பாண்டிக்கோவை.

நோதக வுடைத்தே நெஞ்ச மதிமிசை
மாதர்/குவளை/மலர்ந்த.........
[அருந்தகைக்] கண்கண் டாற்றிய
பெருந்தகை யண்ணலைக் கழறினன் பெரிதே.

—பொருளியல்.



கண்ணு முகமுங் கதிர்முலையுங் கண்டக்கால்
... ... ...வெண்ணுதிறற்
செவ்வண்ண வேலினன் சித்தந் தளராதே
யெவ்வண்ண மாற்றின னீங்கு.

—கிளவித்தெளிவு.

[நிலைகூறு கிளவியென்பது பாங்கன் குறியிட]த்துச் சென்ற(? று) தலைமகனிலைமை கண்டு [தலை]மகற்குக் கூறுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

பணந்தா ழரவரை[ச் சிற்றம் பலவர்பைம் பொற்கயி]லைப்
புணர்ந்தாங் ககன்ற பொருகரி யுன்னிப் புனத்தயலே
மணந்தாழ் பொழிற்கண்[வடிக்கண் பரப்பி மடப்பிடிவாய்
நிணந்தாழ்]சுடரிலை வேலகண் டேனென்று நின்றதுவே.

—திருக்கோவை - 34.

மின்னே ரொளிமுத்த வெண்மணன்
[மேன்விரை நாறுபுன்னைப்]
பொன்னேர் புதுமலர்த் தாய்ப்பொறி
வண்டு [முரன்று] புல்லா
மன்னே ரழிய மணற்றிவென்
ருன்[கன்னி] வார்து[றைவாய்த்
தன்னேரி லா]த தகைத்தின்
றியான்கண்ட தாழ்பொழிலே.

—பாண்டிக்கோவை.

மண்டலம் பண்டுண்ட திண்டேர்
வரகுணன் றெண்டியின்வாய்க்
கண்டலந் தண்டுறைக் கண்டதொன்
றுண்டு கனமகரக்

குண்டலங் கெண்டை யிரண்டொடு
[தொண்டையு]ங் கொண்டொர் திங்கள்
மண்டலம் வண்டலம் பக்கொண்ட
ரூழ வருகின்றதே.

—பழம்பாட்டு.

ஆய்தளிர் பொதுளிய வீததை
காய்கதிர் நுழையாக் கடிபொழில்
யாவயி ஞேரும் விழைவுறுந் தகைத்தே.

—பொருளியல்.

கோல விளக்கிளிகற கொண்டா......லவ்ருளி
நீலவிழி பரப்பி நிற்குமால்—வேலனகண்
அல்லித் திருமங்கை கோமா னருட்கண்டன்
கொல்லிப் புனத்தயலோர் கொம்பு.

—கண்டனலங்காரம்.

செய்ய முலைமேல் வடந்திகழத் திக்கெல்லாம்
வெய்ய குவளை விழிபரப்பிப்—பைய
அளிவிளங்கு வல்லிபோ லங்கொருவர்...
ஒளிவிளங்க நின்ரூருளர்.

—கிளவித்தெளிவு.

அவயுவங் தேறுத லென்பது குறிவழிச்சென்று மீண்ட பாங்கன் றலைவிநிலை கூறத் தலைமகன்........[அதற்கு]ச் செய்யுள் வருமாறு:—

எயிற்குல மூன்றிருந் தீயெய்த
வெய்தவன் றில்லையொத்துக்
குயிற்குலங் கொண்டதொண் டைக்கனி
வாய்[க்குளிர் முத்த]நிரைத்



தயிற்குல வேல்கம லத்திற்
கிடத்தி யனநடக்கு
மயிற்குலங் கண்டதுண் டேலது
வென்னுடை மன்னுயிரே.

—திருக்கோவை - 36.

[மலைந்தான்
[பொதி]யிலங் தேன்மலைப் பூழியன் பூலந்தைப்போர்
பதிவளங் கொண்டு பவளத் திடைநித் திலம்பதித்து
மதியிடங் தன்னிற்...........லுத்தியோர் வஞ்சி நின்ற
அதிசயங் கண்டனை யேயது வேயென தாருயிரே.

—பாண்டிக்கோவை.

வண்டே றியகுழலும் வா[ளைபாய்வள்]ளையிளங்
தண்டே றியகுழையுந் தாழ்வடமும்—கொண்டே
யிளவேய் நிகரிருந்தோ ளேந்திழையை மானிற்
... ... ...

—பழம்பாட்டு.

(உஎ)

பொழில் கண்டு வியத்த லென்பது இவ்வகை யவயவங் தெளிந்த தலைமகன் ருன்புகுந்த பொழி......அதற்குச் செய்யுள் வருமாறு:—

காம்பிணை யாற்களி மாமயி
லாற்கதிர் மாமணியால்
வாம்பிணை யால்வல்லி [யொல்குத
லான்மன்னு மம்பலவன்
பாம்பி]ணை யாக்குழை கொண்டோன்
கயிலைப் பயில்புனமுந்
தேம்பிணை வார்குழ லாளெனத்
தோன்றுமென் சிந்தனைக்கே.

திருக்கோவை - 38.

[துனிதா னகல] மண் காத்துத்
 தொடுபொறி யாயகொண்டத்
பனிதாழ் பருவரை மேல்வைத்த
 பஞ்சவன் பாழிவென்ற
குனிதாழ் சிலைமன்ன[ன் கூடலன்]
 ளைது கூடலைப்போ
லினிதா யெனதுள்ள மெல்லாங்
 குளிர்வித்த தீம்பொழிலே.

—பாண்டிக்கோவை.

தனிமை நெஞ்சத்து முனிவுகண் டகற்றலின்
வினைமாண் பாவை யன்ன
புனையிழை மாதரும் போன்றதிப் பொழிலே.

—பொருளியல்.

குழைமுகத்தா[ற்] கொங்கை மலையு மருங்கால்
விழியரிய நாட்டத்தால் வேனற்—பொழிலெல்லாம்
புல்லார்ப் புறங்கண்ட கண்டன் புகாரனைய
நல்லாளே யாகு நமக்கு.

—கண்டனலங்காரம்.

முருக்கின் புதுமலரால் முல்லை நகையால்
நெருக்கியெழுஞ் செவ்விள நீராற்—குருக்கொடியா
ளன்ற குழைமுகத்தா ளனயந்த நன்னுதலைப்
போன்ற துயர்பூம் பொழில்.

—கிளவித்தெளிவு.

திருவெனவுரைத்த லென்பது பொழிலகத் தெதிர்ப் பட்ட தலைவன் தலைமகளைத் திருவென்றயிர்த்துச் சொல் லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—



காவிரின் றேர்தரு கண்டர்வண் டில்லைக்கண் ணர்கமலத்
தேவியென் றேயையஞ் சென்றதன் றேயறி யச்சிறிது
மாவியன் றன்னமென் னேக்கிநின்வாய்திறவாவிடி[னென்
னவிய]ன் றேயமு தேயணங் கேகட்டழிகின்றதே.

—திருக்கோவை - 41.

மேவியொன் னுரைவெண்மாத்துவென் ருன்..மாறைவாய்த்
தேவியென் றேநின்னை யானினைக் கின்றது சேயரிதாய்க்
காவிவென் ருயகண் ணுயல்லை யேயொன் றுக[ட்டுரையாய்]
ஆவிசென் ருற்பெயர்ப் பாரினி யாரிவ் வகலிடத்தே.

—பாண்டிக்கோவை.

தெய்வ மாக வையுறு நெஞ்சம்
பொய்யா தாயினின் [செவ்வாய்] திறந்து
கிளிபுரை கிளவியாம் பெறுக
வொளியிழை மடந்தை யுயிர்பெயர்ப் பரிதே.

—பொருளியல்.

செய்ய மலரிற் றிரும[களே யெ]ன் றுன்னை
யைய முறுகின்றே னல்லையே—லுய்ய
வுரைதந் தருளா யுயிர்வருமோ போனல்
விரைதந்த மேனியாய் மீண்டு.

—கிளவித்தெளிவு.

ஆற்ருன் கிளத்த லென்பது இவ்வகை சொல்லக்கேட்டு நாணிநிற் கண்புதைத்தாளுக்குத் தலைமகன் கூறுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

தாழச்செய் தார்முடி தன்னடிக்
 கீழ்வைத் தவரைவிண்ணேர்
சூழச்செய் தானம் பலங்கை
 தொழாரினுள் ளந்துளங்கப்

போழச்செ[ய் யா]மல்லை வேற்கண்
புதைத்தபொன் னேயென்னைநீ
வாழச்செய் தாய்சுற்று முற்றும்
புதைநின்னை வாணுதலே.

—திருக்கோவை - 43.

செய்தவம்பே......வல்லகொல்லத் திருவரங்கன்
கைதவம் பேசெய்யக் காய்ந்த பிரான்கதி ரோன்மகனை
வைதவம் பேசிய வாலியு மாமருமுரு......
[எய்தவம்]பேயன்ன கண்மட வீர்புதைத் தென்பயனே.

—கோயிலந்தாதி.

அரும்புடைத் தொங்கற்செங் கோலரி
கேசரி கூடலன்ன
சுரும்புடை[க் கோதைநல்]லாயெமக்
குத்துயர் செய்யுமென்றுன்
பெரும்படைக் கண்புதைத் தாய்புதைத்
தாய்க்குநின் பேரொளிசேர்
கரும்புடைத் தோளுமன் றேவெனை].
யுள்ளங் கலக்கியதே.

பாண்டிக்கோவை.

நாட்டம் புதைக்கின்ற தென்னீ மடந்தை நவகண்டமே
வீட்டும் புகழ்வின்னன் மேவா ரெனவிங்ஙன் யான்வருந்த
வாட்டம் பயின்றுங் கஙிலின் குழம்பணிந் தாகமெங்கும்
வேட்டந் தெரிகின்ற கொங்கைக ளென்னை மிகைசெய்
[தவே.

—பல்சந்தமாலை.

சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்
றிருமுக மிறைஞ்சினை நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகிற் றுங்குத லெளிதே



கொடுங்கோ ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புலவுநா று (கொலை)வே ழத்தின்
றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதுவவல்ல நண்ணு
ரரண்டலை மதிலக(? மதில ராகவு) முரசுகொண்
டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா லணங்கே.

—நற்றிணை - 39.

காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி[ந் தன்]ன கூந்தலும்
வேய்புரை தோளு மணங்குமா லெம்மே.

—பொருளியல்.

கண்டு நிலைதளர்ந்தேன் காத்தருளுங் கார்வரைமேற்
[புண்ட]ரிகம் வைத்தான் புகாரனையீர்—வண்டின்
இளையலம்பு கார்நீழற் கெண்டைமேல் வைத்த
வளையலம்பு செந்தா மரை.

—கண்டனலங்காரம்.

வந்தெ னுடலி னுயிர்வாங்க வாணுதலாய்
சந்த வனமுலையே சாலாதோ—பைந்தளிரால்
நின்[கண் புதை]த்தனையே நின்வடிவெ லாம்புதைய
வென்கண் புதைத்தருளா யின்று.

—கிளவித்தெளிவு.

மருங்கணைத லென்பது......இவ்வகை சொல்லி யாற்றுணைய தலைமகன் றலைமகட்குக் குழலுங் கோதையுந் திருத்துவானுய்ச் சென்று அணைத......ல்லுதல். அதற் குச் செய்யுள் வருமாறு:—

கோலத் தனிக்கொம்ப ரும்பர்புக்
கஃதே குறைப்பவர்தம்
சீலத் தனகொங்கை தேற்றகில்
லேஞ்சிவன் றில்லையன்னாள்
நூலொத்த நேரிடை நொய்ம்மையெண்
ணாதுநுண் டேனசையாற்
சாலத் தகாதுகண் டீர்வண்டு
காள்கொண்டை சார்வதுவே.

—திருக்கோவை - 45.

நாமே யிடையுள்ள வாறறி வாமினி நாங்கள்சொல்ல
லாமே மருதன் மருதவ னத்தன்ன மன்னவரைப்
பூமே லணிந்து பிழைக்கச்செய் தாரொருபொட்டுமிட்டார்
தாமே தளர்பவ ரைப்பார மேற்றுதல் தக்கதன்றே.

—திரு[விடைமருதூர்] மும்மணிக்கோவை - 15.

* * *

சேயன வாண்மைத் திகழ்முடித் தென்னன்
... ...புடனரு டருமே
வின்னுங் குறுகுவ னிரும்பொழி லிடமே.

—பழம்பாட்டு.

இடந்தலைப்பாடு முற்றும். இவையெல்லாம்

'ஆங்கனம் புணர்ந்த கிழவோன் றன்வயிற்
பாங்க னேரிற் குறிதலைப் பெயலும்
பாங்கிலன் றமியோ னிடந்தலைப் படலுமென்
றாங்க விரண்டே தலைப்பெயன் மரபே'

—இறை - 3.

என்னுஞ் சூத்திரத்துட் கண்டுகொள்க.

29. இயற்றுஞ் செழுந்தழை யுங்கண்ணி (உஅ)
யுங்கொண் டிதுளையிடத்
தயற்பின் செல்வைக் குறையுற
லென்றுநல் லஞ்சனந்தோய்



கயற்கண்க ளால்மதன் சக்கரங்
காக்குங் கதிர்முகத்தாய்
நயத்தண் டமிழ்ப்போருட் பாவோர்
நயந்தங் கியம்பினரே.

என் - எனின், இரந்து குறையுற்றவிடத்துக் குறையுறுதலென்னுங் கிளவியொன்றும். அதுவருமாறு:— குறையுறுதலென்பது இடந்தலைப்பட்ட தலைமகன் தழையுங் கண்ணியுங் கொண்டு தோழிபின்னிலை முனியாது இரந்து நிற்றல். என்னை ?

அந்தழை யல்கு லணிநலம் புணரா
வெந்துயர் பெருக வெளிப்பட விரந்தன்று

—வெண்பாமாலை - 11, 9.

என்றாராகலின். அதற்குச் செய்யுள் வருமாறு:—

தேமென் கிளவிதன் பங்கத் திறை[யுறைதில்லை]யன்னீர்
பூமென் றழையுமம் போதுங்கொள் ளீர்தமி யேன்புலம்ப
வாமென் றருங்கொடும்பாடுகள்செய்துநுங் கண்மல[ராங்]
காமன் கணைகொண் டலைசெய்ய வோமுற்றக்கற்றதுவே.

—திருக்கோவை-90.

மண்ணகங் காலா லளந்தவன் மாறன் மலர்ப்பொழில்சூழ்
கண்ணகன் காவிரி நாடனை யீரிக் கமழ்நறவத்
தண்ணறும் போதுந் தழையுங்கொள் ளீரென்னிற்றண்டி [யெம்மே
லெண்ணுமைங் காம சரம்படும் பட்டா லெளிவரவே.

—பாண்டிக்கோவை.

நகுதா மரைமலர் சூழ்வாவி சூழ்வச்ர நாடர்தங்கள்
வகுதா புரியன்ன வாணுத லீர்மற்ற வார்தழையு
மிகுநாண் மலர்களுங் கொண்மின்கள் கொள்ளா [விடின்மதுவந்
தொகுகாம னைங்கணை யாலெம தாவி துவக்குண்ணுமே.

—பல்சந்தமாலை.

கண்ணி யைச(?தகை) சிறந் தனவே தண்ணென்
பூந்தழை செவ்விய போலும் வாங்கிருங்
கூந்தலு மல்குலும் பொலிய
வேந்தினி[ரணி] மின்யாம் விழைகுவம் பெரிதே.

—பொருளியல்.

இதற்கிலக்கணம்

'புணர்ந்த பின்றை யாங்கன மொழகாது
[ப]ணிந்த மொழியாற் றோழி தேர்ந்திரந்து(?தேஎத்து)
இரந்து குறையுறு தலும் கிழவோன் மேற்றே'

—இறை-5.

என்னுஞ் சூத்திரத்துட் கண்டு கொள்க. (உக)

30. நயந்து குறையுற் றவன்வாழ் பதிவினு யாணர்மிக்க
கயந்தங்கு வேழம் வினுத லினமான் கலைவினுதல்
முயன்றன பரும வழிவினுவாயின் மொழிக்கிரங்கல்
வயந்தந்த வஞ்சு மதியுடம் பாடென வைத்தனரே.

என்-னின், மதியுடம்படுத்தல் ஐந்துவகைப்பட்ட கிளவியா மென்பதறிவித்தலைக் கருதிற்று. என்னை? பதிவினுதலும், வேழம் வினுதலும், கலைவினுதலும், வழிவினுதலும், வாய்மொழிக்கிரங்கலும் என. அவற்றுள், பதிவினுதலென்பது இரந்து குறையுற்ற தலைமகன் றோழியுடைய கவர்த்து நின்ற வீறிவை யொருவழிப்படுப்பான்... ... சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

தாரென்னவோங்கு சடைமுடி மேற்றனித்திங்கள்வைத்த
காரென்ன வாருங் கறைமிடற் றம்பல வன்கயிலை
யூரென்ன வென்னவும் வாய்திற வீரொழி வீர்பழியேற்
பேரென்ன வோவுரை யீர்விரை யீர்ங்குழற் பேதையரே.

—திருக்கோவை-56.



அறையார் கழல்மன்ன ராற்றுக் குடியமர் சாய்ந்தழியக்
கறையா ரயில்கொண்ட கோன்கன்னிக் கார்ப்பு [னங்காப்பு] நின்ற
பிறையார் திருநுதற் பெண்ணு ரமுதன்ன பெய்வளையீர்
மறையா துரைமி னெமக்குநும் பேரொடு வாழ்பதியே.

—பாண்டிக்கோவை.

அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்குஞ் சிறுசுளைப் பெரும்[பழங்]
[குழ]விச் சேதா மாந்தி யயலது
வேய்பயி லிறும்பி ஞமுலை (?ஞமறல்) பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக்
க[ருவி மாம]ழை வீழ்ந்தென வெழுந்த
செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனங் காவலு நுமதோ
கோடேந் தல்குல் நீடோ ளீரே.

—நற்றிணை-213.

செய்யவாய் நுண்மருங்குற் சிற்றிடைப் பேரமைத்தோட்
பையர/வல்குற் பணைத்தே(மு)ந்தும்-வெய்யமுலைக்
காரே துவர்வாய்க் கருங்கூந்தற் காரிகையீ
ரூரேது சொல்லீ ருமக்கு.

—கிளவித்தெளிவு.

வேழம்வினுத லென்பது தலைமகளுந் தோழியு மோரிடத்திருப்பச் சென்று தன் குறையறிவிப்பான் சில வேழம் போந்தன வுள[வோ]வென்று சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

இருங்களி யாயின்றி யானிறு மாப்பவின் பம்பணிவோர்
மருங்களியாவன லாடவல் லோன்றில்லை யான்மலையிங்
கொருங்களி யார்ப்பவுமிழ்மும் மதத்திருகோட்டொருநீள்
கருங்களி யார்மத யானையுண் டோவரக் கண்டதுவே.

—திருக்கோவை-52.

வருமால் புயல்வண்கை மான்றோர்
வரோதயன் மண்ணளந்த
திருமால் வளவஞ்சி(யா)(? யன்)னவஞ்
சீறடிச் சேயிழையீர்
கருமால் வரையன்ன தோற்றக்
கருங்கைவெண் கோட்டுப்பைங்கட்
பொருமால் களிறொன்று போந்ததுண்
டோநும் புனத்தயலே.

—பாண்டிக்கோவை.

செம்முக மானதர் செங்குங்கு மப்புயர் சீர்திறந்த
மைம்மலி வாசப் பொழில் [வாய்மதிய] ன்னவாணுதலீர்
மும்மத மாரி பொழியப் பொழிமுகில் போல்முழங்கிக்
கைம்மலை தான்வரக் கண்டதுண் டோநும் கடிபுனத்தே.

—பல்சந்தமாலை.

சீத விரைக்(களபச்)(?கனகச்) செந்தா மரைப்பொகுட்டு
மாதனையீ ரம்போடு வந்ததோ—சோதிப்
பொருதாரை வேற்கண்டன் பூபால தீபன்
கருதாரி [னிங்கோ]ர் களிறு.

—கண்டனலங்காரம்.

கலைவினுத லென்பது தலைமகளுந் தோழியு மிருந்த விடத்துச் சென்று சில மான்போந்தன வுளவோ வெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—



கருங்கண் ணனையறி யாமைநின்
றோன்றில்லைக் கார்ப்பொழில்வாய்
வருங்கண் ணனையவண் டாடும்
வளரிள வல்லியன்னீர்
பொருங்கண் ணினைய கணைபொரு
புண்புண ரிப்புனத்தின்
மருங்கண் ணனையதுண் டோவந்த
தீங்கொரு வான்கலையே.

—திருக்கோவை-53.

சிலைமாண் படைமன்னர் செந்நிலத்
தோடச் செருவிளைத்த
கொலைமா ணயின்மன்னன் றென்புன
ளுடன்ன கோல்வளையீ
ரிலைமாண் பகழியி(னேவன)(?னேவுண்டு)
தன்னினத் துட்பிரிந்தோர்
கலைமான் புகுந்ததுண் டோவுரை
யீருங்கள் கார்ப்புனத்தே.

—பாண்டிக்கோவை.

அம்புமுகங் கிழித்த(புண்வாய்த்) கலைமான்
போந்தன வுளவோ [வுரையீர்]
[ளா]மட ளேக்க மரீஇயினம் படர்ந்தே.

—பொருளியல்.

நறைபரந்த சாந்த ம[றவெறிந்து] நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்—பிறையெதிர்ந்த
தாமரை போன்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன [வீண்டு.]

—திணைமொழி.

தத்திச் சிலைத்தெழுந்து தார்குருதி மெய்சோர
இத்திக்கி லிந்தப் புனத்திடையே—தித்தித்தேன்
போந்தனைய சோர்குழலீர் யானெய்த [போ]தொருமான்
போந்ததே யிவ்வழி[யே புக்கு.]

—பழம்பாட்டு.

வழிவினாத லென்பது நம்மூர்க்கு வழிசொல்லுமி னெனச்சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

சிலம்பணி கொண்டசெஞ் சீறடி பங்கன்றன் சீரடியார்
குலம்பணி கொள்ள வெனைக்கொடுத் [ே]தான்கொண்டு [தானணியுங்
கலம்பணிகொண்டிடமம்பலங்கொண்டவன்கார்க்கயிலைச்
சிலம்பணி கொண்டநுஞ் சீறூர்க் குரைமின்கள் சென் [னெறியே.

—திருக்கோவை-54.

வெல்லுந் திறனினைந் தேற்றார் விழிஞத்து விண்படரக்
கொல்லின் மலைந்த[செவ் வே]ல்கொண்ட கோன்கொல் [லிச் சாரலின்றேன்
புல்லும் பொழிலிள வேங்கையின் கீழ்நின்ற பூங்கொடியீர்
செல்லு நெறியறி யே[னுரை] யீர்நுஞ் சிறுகுடிக்கே.

—பாண்டிக்கோவை.

உரைமி னீர்மன் னெமக்கே வரையிடை
யரும்படர்க் கவலை நீந்திய
பெருந்துய............ர்தருநெறியே.

—பொருளியல்.

வாய்மொழிக்கிரங்க லென்பது இவ்வகை பலவும் வினாவ வுரைபெறாது நின்ற தலைமகன் வருந்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—



இரத முடைய நடமாட் டுடையவ ரெம்முடைய
வரத முடைய வணிதில்லை யன்னவ ரிப்புனத்தார்
விரத முடையர் விருந்தொடுபேச்சின்மை மீட்டதன்றேற்
சரத முடையர் மணிவாய் திறக்கிற் சள(? ல)க்கென்பவே.

—திருக்கோவை-57.

தன்னும் புனை[?ரை]யு மழையுரு
மேறூர்ந்தன் றானைமுன்னாத்
துன்னுங் கொடிமிசை யேந்திய
கோன்கொல்லிச் சூழ்பொழில்வாய்
மின்னுங் கதிரொளி வாண்முகத்
தீரென் வினாவுரைத்தால்
மன்னுஞ் சுடர்மணி போதரு
மோவுங்கள் வாயகத்தே.

—பாண்டிக்கோவை.

விந்தா சனிகொண்கன் வேந்தரி
லாண்பிள்ளை வென்றிவெற்பிற்
கொந்தார் தினைப்புனங் காவனிற்
பீர்வழி கூறுமென்று
வந்தார் சிலர்க்கு வழியறி
வாரொரு வார்த்தைசொன்னாற்
சிந்தாது காணும் பவழச்செவ்
வாயிற் றிருமுத்தமே. —வங்கர்கோவை.

இவ்வகை பிறவும் வந்தன வெல்லாம்

'இரந்து குறையுறாது கிழவியுந் தோழியும்
ஒருங்குதலைப் பெய்த செவ்வி நோக்கிப்
பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துவ கிளந்து
மதியுடம் படுத்தற்கு முரிய வென்ப' —இறை - 6.

என்னுஞ் சூத்திரத்துட் கண்டுகொள்க. மதியுடம் படுத்தல் முற்றும்.

(கூ௰)

31. உடன்படுதோழியயிர்த் தன்றுரைத்தல் சுனையாட்டுதல்
அடர்ந்தேதிர் நன்சுனையின் வியப் பம்புலி யவ்வணங்கு
நடம்பயி லுஞ்சுனை தன்னை மிதுத்தல் நடுங்கநாட்டம்
துடங்கையைவென்றவிழிமாய்துறையையுறவுணர்வே.

32. உறவா யிநவ ரிடத்து முரவோன் வரவுணர்தல்
திறமார் வகைமைக் கரவுநாட்டஞ்சேட் படுத்தலந்த
விறலா ரவனை மறையே லெனல்கூ றெனவிடுத்தல்
அறலார் குழலை யறியே னெனல்குறி யா[ள்]கூறலே.

33. ... ... ...
... ... ...
... ... [கை]யுறை பறைசீர்
மாறுந்தகைத்தா நகைத்துரையாடல் தகைமறுப்பே.

34. மறுத்தாள்குறிப்பறிந் தேற்றல்மடற்றிறங் கூறுதல்பின்
வெறுப்பார் மடலை வெளிப்படுத்த[ல்]லம் மடல் [விலக்கல்
செறுப்பாலெழுதரிதே[மே]ன்றலச்சேட்படைக்கழிதல்
ஒறுத்தா ளருளின்றுடையளானுளேன் றுரைத்ததுவே.

35. உரைக்கத்தகுந்தழை கோடல்குறிப்பை யறிவுறுத்தல்
விரைப்போற்குழலைவலிதாக்குறைநயப்பித்தல்மிக்க
வரைக்குற்ற கோங்கை...

36. ... ... ...
37. ... ... ...
38. ... ... ...
39. ... ... ...
40. ... ... ...
41. ... ... ...
42. ... ... ...



[இச் சூத்திரங்கள் என்...னின் ... ... தோழி
யயிர்த் துரைத்தலும், சுனையாட்டுரைத்தலும், சுனைவியந்
துரைத்தலும், பிறைதொழு கென்றலும், தகையணங்கு
றுத்தலும், நடுங்கநாட்டமும், குறையுணர்வும், இருவரு
முள்வழி யவன் வரவுணர்தலும், கரவு நாட்டமும், சேட்
படையும், மறையேலெனலும், கூறெனவிடுத்தலும்,
அறியே னெனலும், குறியாள் கூறலும், அரியளாமென
லும், குலமுறை கிளத்தலும், நகைத்துரையாடலும், தழை
மறுத்தலும், குறிப்பறிந் தேற்றலும், மடற்றிறங் கூறலும்,
மடல் வெளிப்படுத்தலும், மடல்விலக்கலும், எழுதரி]
தென்றலும், சேட்படைக்கழிதலும், அருளுடையளென்ற
லும், [தழைகோடலும்,] குறிப்பறிவுறுத்தலும், வலிதாகச்
சொல்லிக் குறைநயப்பித்தலும், மெலிதாகச்சொல்லிக்
குறைநயப்பித்தலும், நாணொடு கூறலும், முகம்புகுத
லும், நயந்தமை கூறலும், பகற்குறியிடங்காட்டலும்,
இடத்துய்த்தலும், இடத்துய்த் தகறலும், எதிர்ப்பட
லும், கோலஞ்செய் துரைத்தலும், உண்மகிழ்ந்துரைத்
தலும், கொண்டு நீங்கலும், வாய்விடு கிளவியும்,
பொழுதுகண் டிரங்கலும், படருறுகிளவியும், வருந்து
தல் கிளத்தலும், இன்றறிந்தேனென்றலும், குடித்திறங்
கூறலும், இற்செறிவுரைத்தலும், சிறைப்புறக் கிளவி
யும், வெளிப்பட வுரைத்தலும், கணியென வுரைத்தலும்,
நனைகெடச் செய்திலமென்றலும், எறுவிடு[த்]தலும்,
சூளென நினைத்தலும், புனங்கண் டழிதலும், இரவிடங்
காட்டலும், வரவுணர்ந்துரைத்தலும், தாய்துயிலறிதலும்,
இரவுக்குறியுய்த்தலும், குறியுய்த்தகறலும், குறியெதிர்ப்
படலும், திங்கட்குரைத்தலும், அன்னத்தொலி யுணர்த
லும், கடலொலி கூறலும், இரவுக்குறி கழிதலும், கழிபடர்
கிளவியும், கையறு கிளவியும், அச்சக்கிளவியும், பகல்வர

லென்றலும், இரவு வரலென்றலும், இரவும் பகலும் குறி வாரலென்றலும், தன்னுட் கையா றெய்திடு கிளவியும், கடலொடு கவலலும், ஆற்றாமை கூறலும், வ[ை]ரவு கிளத்தலும், குறிப்புரைத்தலும், இல்லதுரைத்தலும், அலரறிவித்தலும், அயன்மண முரைத்தலும், மணமுர சறைதலும், பரிசங் கிளத்தலும், உடன்போக்குரைத்தலும், [செலவுடன்படுத்தலும்,] செலவழுங்குவித்தலும், எனப்படுமென்றவாறு. அவற்றுள் அயிர்த்துரைத்தலென்பது இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகள் கண் சிவப்பு வேறுபாடுகண்ட தோழி யயிர்த்துரைத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

நிருத்தம் பயின்றவன் சிற்றம்
பலத்துநெற் றித்தனிக்கண்
ஒருத்தன் பயிலுங் கயிலை
மலையி னுயர்குடுமித்
திருத்தம் பயிலுஞ் சுனைகுடைந்
தாடிச் சிலம்பெதிர்கூய்
வருத்தம் பயின்றுகொல் லோவல்லி
மெல்லியல் வாடியதே. —திருக்கோவை-62.

கந்தா ரடுகளியானைக் கழனெடு மாறன்கன்னிக்[மென்பூம்
கொந்தா டிரும்பொழில் வாய்ப்பண்ணை யாயத்துக்கோல
பந்தா டலினடி நொந்துகொல் பைங்கழலெம்மன்னமேல்
வந்தா டலினடி நொந்துகொல் வாணுதல் வாடியதே.
—பாண்டிக்கோவை.

புனையிழை யாயமொடு பூம்பந் தெறிய[வும்]
நனைமலர் ஞாழ லொள்வீ கொய்யவும்
வருந்தினள் கொல்லோ மடந்தை
பிரிந்தன்று மாதோ பண்புகெழு நிறனே.
—பொருளியல்.



கண்ணுஞ் செவ்வரி பரந்த [ன்று நுதலு]
நுண்வியர்ப் பொறித்து வண்டார்க் கும்[மே]
வாங்கமை மென்றோண் மடந்தை
யா(ரியா)ங்கா யினள்கொ லென்னுமெ[ன்] னெஞ்சே.
—சிற்றெட்டகம்.

[குன்றின் சுனையிற்] குளித்தோ குளிர்காவி
லொன்ற மலர்கொய்ய வோடியோ—வன்றாயின்
மற்றின்றா துண்டோ மலர்வல்லி வாடியதின்
றெற்றினு ல[ாமா]றிது. —கிளவித்தெளிவு.

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.
—காமத்துப்பால் - 1272.

சுனையாட்டுரைத்த லென்பது நெருநல் நின்னை நீங்கி மேதக்கதொர் சுனையாடினேற்கு ஆயிற்றாகாதே யிவ் வேறுபாடு எனத் தலைமகள் தோழிக்குச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

மதிமர பாந்திரு மாமர பிற்றிகழ் மாற னெங்கோ
னதிசெய பாண்டிய னாமரி கேசரி யானைதங்கும்
பொதியிலி னாங்குனை நீங்கிய போதொரு பூஞ்சுனைவாய்
விதியது தான்கொடு போய்ப்புன லாட்டு விளைவித்ததே.
—பாண்டிக்கோவை.

சுனைவியந்துரைத்த லென்பது சுனையாடினார்க்கு இந் நீர்மை பெறலாமெனின், யானுங்குடைவேனெனச்சொல் லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

செந்நிறமேனிவெண் ணீறணிவோன்றில்லை யம்பலம்போ
லந்நிற மேனிநின் கொங்கையி லங்கழி குங்குமமு
மைந்நிற வார்குழல் மாலையுந் தாதும் வளாய்மதஞ்சே
ரிந்நிற மும்பெறின் யானுங் குடைவே னிருஞ் சுனையே.
—திருக்கோவை - 69.

தேர்மன்னு வாட்படை செங்நிலத்தோடச் செருவிளைத்த
போர்மன்னு தென்னன் பொதியிற் புனமா மயில்புரையு
மேர்மன்னு காரிகை யெய்தலுண் டாமெனின் யானுநின்
நீர்மன்னு நீல நெடுஞ்சுனை யாடுவ னேரிழையே. [போல்

—பாண்டிக்கோவை.

பையுண் மாலைப் பழுமரம் படரிய [க்கு
நொவ்வுப்பறை வாவல் நோன்சிறை கொ(?யொ)
மட(?டி)செவிக் குழவி தழீஇப் பையாந்
திடுகவின் மடப்பிடி யெவ்வங் கூர
வெந்திற லாளி வெரீஇச் சந்தின்
பொரியரை மிளிரக் குத்தி வான்கே
ழுருவ வெண்கோ டியக்கொண்டு கழியுங்
கடுங்கண் யானைக் காலில வொற்றலிற்
கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு
பேஎ நாறுந் தாழ்நீர்ப் (பணிப்) பனிச்சுனைக்
கோனே ரெல்வளை தெளிர்ப்ப நின்போல்
யானு மாடிக் காண்கோ தோழி
வரைவயிறு கிழித்த நிழறிகழ் நெடுவே
றிகழ்பூண் முருகன் றீம்புன லலைவாய்க்
கமழ்பூம் புறவிற் கார்பெற்றுக் கலித்த
வொண்பொறி மஞ்ஞை போல்வதொர்
கண்கவர் காரிகை பெறுதலுண் டெனினே.

—நெடுந்தொகை?

ஆடுஞ் சுனையாதா...டினீ ராகாதே
கோடையிலு மந்நீர் குளிர்ந்திருக்கும்—நீடுபுகழ்க்
கொற்றத்... ...தென்குடந்தை
வெற்பிற் குளிர்சுனை நீர். —[... ...]

வெததுதன யோமிக் (குடந்தை தொண்ணூறுக) ...



அடியுறு பைங்காந்தள் செங்காந்த ளங்கைக்
கொடியிடை[யே யாமுங் குடை] தும்—படிமுனையிற்
சேந்தவேற் கண்டன் சிலம்பிற் பனிச்சுனைநீ
ரீந்தவேற் கண்ட னெழில். —கண்டனலங்காரம்.

ஓடியொளித்து ... ...
* * * விண்டோய்]
[விரையாடிய கண்ணி வேந்தன் விசாரிதன் கொல்லி.
[வரையா டிய] புனங் காவலு மானின் வழிவரவு
நிரையா டியகுழ லாட்கு மிவற்கு நினைப்பினில்லை
யுரையாடுபகண்ணி னுலுள்ளத்துள்ள து மொன்[றுள]வே.

—பாண்டிக்கோவை.

ஏனல் காவ லிவளு மல்லள்
மான்வழி வருகு|னிவனு மல்லன்
நரந்தங் கண்ணி யிவனோ டிவளிடைக்
கரந்த வுள்ளமொ[டு] கருதியது பிறிதே
நம்மு ணுணினர் போலத் தம்முள்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
வுள்ளத் துள்ளே மகிழ்ப
சொல்லு மாடுப கண்ணி னானே. —நற்றிணை?

பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலின மகவு நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே.

—பொருளியல்.

பூண்ட குழையும் புனங்காக்கும் போலல.
வாண்டகையு மான்றேடு வானல்லன்—பாண்டொடுத்த
புள்ளோட்டுந் தார்க்கண்டன் பூம்புகா ரன்னார்க்கிங்
குள்ளோட்டங் கண்களிலே யுண்டு. —கண்டனலங்காரம்.

(௩௧)

இருவரு முள்வழி யவன்வர வுணர்தல் என்பது தலைமகன் சொல்வேறுபாடு கண்ட தோழி துணிந்துணர்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

பல்லில ஞகப் பகலைவென் ரேன்றில்லை பாடலர்போ
லெல்லில ஞகத்தொடேனம் விஞவிவன் யாவன்கொலாம்
வில்லில ஞகத் தழைகையில் வேட்டங்கொண் டாட்ட
[மெய்யோர்
சொல்லில ஞகற்ற வாகட வானிச் சுனைப்புனமே.

—திருக்கோவை - 60.

[பொதியில்
மழையும் புரைவண்கை வானவன் மாறன்மை தோய்
வழையுங் கமழு மணிநெடுங் தோட்டுவண் சந்தனத்தின்
றழையும் விழைதகு கண்ணியு மேந்தித்தண் பூம்புனத்தி
னுழையும் பிரிய வருனறி யேனவ னுள்ளியதே.

—பாண்டிக்கோவை.

கையது செம்மலர் தழையே விஞவது
[தெய்யு]புண்வாய் மாவே கைவிட்
டகலா னம்மவிவ் வகன்புனந்
தகையோ னுள்ளிய தறியோம் பெரிதே.

—பொருளியல்.

வில்வேறு பட்ட படியே வினைவேறு
சொல்வேறு பட்டபடி தோற்றுவிக்க — மல்வேறு
போகாத தோளும் பொலிவழிய நம்புனம்விட்
டேகாத தென்கொ லிவர். —கிளவித்தெளிவு.

கரவுநாட்ட மென்பது தோழி தலைமகளையுந் தலைமகனையும் நோக்கித் தன் மதியுடம்படுத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

காகத் திருகணுக் கொன்றே மணிகலங் தாங்கிருவ
ராகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமா
மேகத்தொருவ னிரும்பொழிலம்பலவன் மலையிற் [களே
ரேகைக்குந் தோன்றற்கு மொன்று யினவின்பத் துன்பங்

—திருக்கோவை - 71.



செறிந்தார் கருங்கழற் றென்னவன்
செங்நிலத் தைச்செருவில்
மறிந்தார் புறங்கண்டு நாணிய
கோன்கொல்லிச் சாரல்வந்த
[நெறிந்தார்] கமழ்குஞ்சி யானே
டிவளிடை நின்றதெல்லா
மறிந்தேன் பலநினைந் தென்னையொன்
றேயிவ ராருயிரே. —பாண்டிக்கோவை.

[சீதமணமு] நறுமலருஞ் சே[ர்]ந்ததுபோற்
காதன் மிகவுங் கலந்தனர்க—ளாதலினற்
றிண்டிறற்கை வில்லிக்குஞ் செந்தா மரைமுகத்திவ்
வொண்டொடிக்கு மொன்றே யுயிர்.

—பழம்பாட்டு.

இவையெல்லாம் 'முன்னுற வுணர்தல்' —இறை - 7. என்னு மிலக்கணத்துட் கண்டுகொள்க.

சேட்படுத்த லென்பது இப் புனம் மிகவும் காவலுடைத்து: நீர் இயங்கன்மின்: எனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

முனிதரு மன்னையு மென்னையர் சாலவு மூர்க்கரின்னே
தனிவரு மிந்நிலத் தன்றைய குன்றமுந் தாழ்சடைமேற்
பனிதரு திங்க ளணியம் பலவர் பகைசெகுக்குங் [னே.
குனிதரு திண்சிலைக் கோடுசென் றுன்சுடர்க் கொற்றவ

—திருக்கோவை - 98.

புல்லா வயவர் நறையாற் றழியப் பொருதழித்த
வில்லான் விளங்குமுத் தக்குடைவேந்தன் வியனிலத்தோ
ரெல்லாமிறைஞ்சநின் றேன்கொல்லிமல்லலஞ்சாரலிங்கு
நில்லா தியங்குமின் காப்புடைத் தையவிந் நீள்புனமே.

—பாண்டிக்கோவை.

நண்ணுத லரிதே தண்ணெ ளளா (?ன்புனத்து)
ளெண்ணிய குறையொன் றுளதெனின்
நண்ணுது முடித்தி யண்ண னீயே.

—பொருளியல்.

மறையே லென்பது தோழி தலைமகனை நின்குறை யென்னை மறையாதொழிதி யெனச் சொல்லுதல். அதற் குச் செய்யுள் வருமாறு:—

பண்டா லியலு மிலைவளர் பாலகன் பார்கிழித்துத்
தொண்டா லியலுஞ் சுடர்க்கழ லோன்றொல்லைத் தில்லை
[யின்வாய்
வண்டா லியலும் வளர்பூந் துறை[வ] மறைக்கிலென்னைக்
கண்டா லியலுங் கடனில்லை கொல்லோ கருதியதே.

—திருக்கோவை - 105.

மின்னை மறைத்தசெவ் வேல்வலத்
தால்விழி ஞத்துளொன்ஞர்
மன்னை மறைத்தவெங் கோன்வையஞ்
சூழ்பௌவ நீர்ப்புலவு
தன்னை மறைத்திள ஞாழல்
கமழுந்தண் பூந்துறைவா
வென்னை மறைத்த விடத்திய
லாதுகொ லெண்ணியதே.

—பாண்டிக்கோவை.

கடிகமழ் கண்ணி நெடுவரை யாயத்து
வடிவே லண்ண (லென்னை) மறைப்பின்
முடியா தாகுநீ முன்னிய வினையே.

—பொருளியல்.

கூறெனை விடுத்த லென்பது தோழி தலைமகனை நின் குறை நீயே சென்றுரை யெனச் சொல்லியது. அதற்குச் செய்யுள்:—



அந்தியின் வாயெழி லம்பலத்
தெம்பர னம்பொன்வெற்பிற்
பந்தியின் வாய்ப்பல வின்சுளை
பைந்தே னொடுங்கடுவன்
மந்தியின் வாய்க்கொடுத் தோம்புஞ்
சிலம்ப மனங்கனிய
முந்தியின் வாய்மொழி நீயே
மொழிசென்றெம் மொய்குழற்கே.

—திருக்கோவை - 99.

சேயே யெனநின்ற தென்னவன்
செந்நிலத் தேற்றதெவ்வர்
போயே விசும்பு புகச்செற்ற
கோனந்தண் பூம்பொதியில்
வேயே யனையமென் றோளிக்கு
நின்கண் மெலியுறுநோய்
நீயே யுரையாய் விரையா
ரலங்க னெடுந்தகையே.—பாண்டிக்கோவை.

பொன்னியல் சுணங்கின் மென்முலை யரி[வை]க்கு
மின்னிவ ரொளிவே லண்ணல்
நின்னுறு விழுமங் கூறுமதி நீயே. —பொருளியல்.

அறியேனென்றலென்பது தோழி தலைமகனை நீசொல்லுகின்றவளை நானறியேனெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

விண்ணிறந் தார்நிலம் விண்டவ ரென்றுமிக் காரிருவர்.
கண்ணிறந் தார்தில்லை யம்பலத் தார்கழுக் குன்றினின்று
தண்ணறு[ந்தாதிவர் சந்தனச் சோலைப்] பந் தாடுகின்ற
ரெண்ணிறந் தார்பலர் யார்கண்ண தோமன்ன நின்
[னருளே.

—திருக்கோவை - 107.

பொறிகெழு கெண்டைபொன் மால்[வரை
மேல்வைத்திப் பூமியெல்லா
நெறிகெழு செங்கோ னடாநெடு
மாறனெல் வேலிவென்றான்
வெறிகமழ் பூங்கன்னிக் கானல்
விளையாட் டயரநின்ற
செறிகுழ லார்பலர் யார்கண்ண
தோவண்ணல் சிந்தனையே.]

—பாண்டிக்கோவை.

[குறியாள் கூறலென்பது... ... ...]

[நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்
பொறிமாண் வரியலவ னாட்டலு மாட்டாள்]
[சிறு]நுதல் வேரரும்பச் சிந்தியா நின்றாட் [கோ.
கெறிநீர்த்தண் சேர்ப்பயா னென்சொல்லிச் செல்

—பழம்பாட்டு.

அலவ[ே]னாட[ா]டலு மாடா[ண்மா]டு
மலர்ப்பூங் கானல் வண்டலு மயரா
ளோவியப் பாவை யொத்தனள்
யாதுகொ லண்ணல்யான் சொல்லு மாறே.

—பொருளியல்.

(௩௨)

அரியளாமென... ...தலைமகளெமக்குப் பெரியள்; யாம் குற்றேவல்மகளிர்; ஆதலால் அவள் நமக்கரியளெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

புட்புலம் பும்புனற் பூலந்தைப் போரிடைப் பூழியர்கோ
னுட்புலம் போடுசெல் லச்செற்றவேந்த னுறந்தையன்னாள்
கட்புல மாச்செலுந் தெய்வங்கண் டாய்கமழ் பூஞ்சிலம்பா
வட்கில னாகியெவ் வாறு மொழிவனிம் மாற்றங்களே.

—பாண்டிக்கோவை.



நெருநலு முன்னா ளெல்லையு மொருசிறைப்
புதுமை யாதலிற் கிளத்த னாணி
நேரிறை வளைத்தோளுன் றோழி செய்த
வாருயிர் வருத்தங் களையா யோவென
வெற்குறை யுறுதி ராயிற் சொற்குறை
யெம்பதத் தெளியளோ மடந்தை
யின்ப வாழ்க்கைய ளிவண்மன் னெமக்கே.

—பொருளியல்.

குலமுறைகிளத்தலென்பது தலைமகனை நீர் உயர்ந்த குலத்துள்ளீர்; நுங்குலத்திற்கு ஆகோமெனத் தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

தெங்கின் பழங்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக்
கொங்கம் பழனத் தொளிர் கு[ளி]ர்நாட்டினை நீயுமைகூர்
பங்கம் பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாபதைப்பச்
சிங்கந் திரிதரு சீறூர்ச் சிறுமியென் றேமொழியே.

—திருக்கோவை-100.

[ளநாட்
நடைமன்னு மென்றெமை நீர்வந்து நண்ணல்நன் னீர்வ
டிடைமன்னு செல்வர் நுமரெமர் பாழி யிகல்விளைத்த
படைமன்னன் றெல்குல மாமதி போற்பனி முத்திலங்கு
குடைமன்னன் கோடுயர் கொல்லியஞ் சாரற் குறவர்களே.

—பாண்டிக்கோவை.

இவளே, கான னண்ணிய காமர் சிறுகுடி
நீர்நிறப் பெருங்கடல் கலங்க வுள்புக்கு
மீனெறி பரதவர் மகளே நீயே
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வர் காதன் மகனே
நிணச்சுறா வறுத்த வுணங்கல் வேண்டி

யினப்புள் ளோப்பு மெமக்குநல னெவனோ
புலவு நாறுதுஞ் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவ[தோ] வன்றே
யெம்ம னோரிற் செம்மலு முடைத்தே.

—நற்றிணை-45.

நிலையிருங் குட்டத்தி னெடுந்திமி லியக்கி
வலையிற் றந்த வாடுமீ னுணங்கல்
விலையோ விலையென வேட்பக் கூறி
நெல்லொடு பெயரு நிரம்பா வாழ்க்கை
வேட்டக் கிளையொடு வினவுதி ரெனினே
பூட்டுவிற் புரையும் புருவவாண் முகத்துப்
பிறைகிடந் தன்ன நுதலிவ
ளிறைவளைப் பணைத்தோ ளெய்தலோ வரிதே.

—சிற்றெட்டகம்.

திருந்தா வாழ்க்கைச் சிறுகுடி யெமக்குப்
பெருந்தகை யண்ண(லி(?னி)ன்ன(?னி)டை
பொருந்திய கேண்மையும் புரைவதோ[வன்றே.]

—பொருளியல்.

சேரி வலைஞர் திறைகொணர்ந்த மீனுணங்கல்
மூரி வலையுணங்கு முன்றில்வாய்—நீரெங்கள்
தேங்கோதை தோள்சேரச் சேருமோ சேர்ப்பரே
[பூங்கோதை] யோடும் புலால்.

—[...                    ...]

புதிய நறுங்குவளைப் பூமுடிப்பார் கானல்
முதியனவு முண்டகப்பூ மோவா—ரதிகன்
றலைக்குலத்தீர் நீர்நாங்கள் தாழ்குலத் தோமுந்
...            ...            ...

—[...                    ...]



[நகைத்துரையாடல் என்பது...            ...            ...]
...            ...            ...
வேழ.மெ.ருகணையா வீடுவிப்பர்—கேழல்
தசையுடைத்த வம்பினொடும் போந்ததே|சால
விசையுடைத்து நீர்பிடித்த வில்.

—பழம்பாட்டு.

[தழை மறுத்து]ரைத்த லென்பது தலைமகன் கையுறைகொணர்ந்த தழையை யிவ்விடத் துள்ளதன்றெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

எழில்வா யிளவஞ்சி யும்விரும் பும்மற் றிறைகுறையுண்
டழல்வா யவிரொளி யம்பலத் தாடுமெஞ் சோதியந்தீங்
குழல்வாய் மொழிமங்கை பங்கன்குற் றாலத்துக் கோலப் [பிண்டிப்
பொழில்வாய் தடவரை வாயல்ல தில்லையிப் பூந்தழையே.

—திருக்கோவை-94.

வேனக நீண்டகண் ணாளும்
விரும்புஞ் சுரும்பரற் றுந்
தேனக விண்டவண் டார்கண்ணி
யாய்சிறி துண்டுதெவ்வர்
வானக மேறவல் லத்துவென்
றூன்கொல்லி மால்வரைவாய்க்
கானக வாணருங் கண்டறி
யாரிக் கமழ்தழையே.

—பாண்டிக்கோவை.

மாணெழி லண்ணல் வாங்கலம் யாமெஞ்
சேணுயர் சிலம்பின் யாங்கணுங்
காணல மன்னேவிக் கமழ்பூந் தழையே.

—பொருளியல்.

(௩௩)

குறிப்பறிந்தேற்ற லென்பது எம்பெருமாட்டி குறிப் பறிந்தல்லது இத் தழை கொள்ளேமெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

யாழார் மொழிமங்கை பங்கத்
திறைவ னெறிதிரைநீ
ரேழா யெழுபொழி லாயிருந்
தோனின்ற தில்லையன்ன
சூழார் குழலெழத் தொண்டைச்செவ்
வாய்நவ்வி சொல்லறிந்தாற்
றூழா தெதிர்வந்து கோடுஞ்
சிலம்ப தருந்தழையே.

—திருக்கோவை-93.

துடியா ரிடைவடி வேற்கண்
மடந்தைதன் சொல்லறிந்தாற்
கடியார் கமழ்கண்ணி யாய்கொள்வல்
யான்களத் தூரில்வென்ற
வடிவா ரிலங்கிலை வேன்மன்னன்
வானே றணிந்தவென்றிக்
கொடியான் மழைவளர் கொல்லியஞ்
சாரலிற் கொய்தழையே.

—பாண்டிக்கோவை.

மாமலைச் சிலம்ப மயிலேர் சாயற்
றேமொழி நிலைமை தெரிந்தபின்
பூமென் றண்டழை கொள்குவன் புரிந்தே.

— பொருளியல்.

* * *

['துறையுறுங் கிழவனை யுணர்ந்த தோழி
சிறையுறக் கிளந்து சேட்பட] நிறுத்தலு



மென்னை மறைத்த லேவனு கியரேன
முன்னுறு புணர்ச்சி முறைமுறை சேப்பலு
மாயப் புணர்ச்சி யவனொடு நகாஅ
நீயே சென்று கூறேன [விடுத்தலு]
மறியாள் போறலுங் குறியாள் கூறலும்
படைத்துமொழி கிளவியுங் குறிப்புவேறு கோளலு
மன்ன பிறவுந் தலைப்பெயல் வேட்கை
முன்னுறு புணர்ச்சிக்[குரிய வே]ன்ப.' —இறை-12.

என்னுஞ் சூத்திரத்துள்ளும்

'முன்னுற வுணரினு மவன்குறை யுற்ற
பின்ன ரல்லது கிளவி தோன்றது' —இறை-9.

என்னுஞ் சூத்திரத்துள்ளுங் கண்டுகொள்க.

மடற்றிறங் கூற லென்பது தோழி தழைமறுப்பதற்கு ஆற்றாளுகிய தலைமகன் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் றென்புலியூ
ரீசன சாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனைமடலே.

—திருக்கோவை-74.

படலே றியமதில் மூன்றுடைப்
பஞ்சவன் பாழிவென்ற
வடலே றயின்மன்னன் றெம்முனை
போன்மெலிந் தாடவர்கள்
கடலே றியகழி காமம்
பெருகிக் கரும்பனையின்
மடலே றுவர்மற்றுஞ் செய்யா
தனவில்லை மாநிலத்தே.

—பாண்டிக்கோவை.

மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே.

—குறுந்தொகை . 17.

கொண்டதோர் காதற் குணமுடியாக் கொள்கைத்தேற்
குண்டுநீர் வேலைக் குவலயத்தோர்—வண்டின்
கணங்காட்டுங் கூந்தலாய் ... ...
மணங்காட்டுங் காந்தள் மலர்.

—அகத்திணை.

மங்கையர்தங் கண்ணால் மயங்கினார் வெள்ளெலும்புந்
துங்க வெருக்குந் தொடுத்தணிந்—தங்க[மெலாம்]
[வெந்தேறு]சாம்பல் மிகவணிந்து வீதிதொறும்
வந்தேறி யூர்வர் மடல்.

—கிளவித்தெளிவு.

மடல் வெளிப்படுத்த லென்பது இவ்வகை யுலகினி...

* * * (௩௪)

குறிப்பறிவுறுத்த லென்பது தானறிந்தபடியைத் தலைமகட்குப் புலனாகாமை மறைத்துத் தலைமகளுழைச் சென்று சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

வரிசேர் தடங்கண்ணி மம்மர்கைம்
மிக்கென்ன மாயங்கொலோ
வெரிசேர் தளிரன்ன மேனிய
னீர்ந்தழை யன்புலியூர்ப்
புரிசேர் சடையோன் புதல்வன்கொல்
பூங்கணை வேள்கொலென்னத்
தெரியே முரையான் பிரியா
னொருவனித் தேம்புனமே.

—திருக்கோவை-83.



கொடியார் நெடுமதிற் கோட்டாற்
றரண்கொண்ட [கோன்பொதியிற்]
கடியார் புனத்தயல் வைகலுங்
காண்பன் கருத்துரையா
னடியார் கழல னலங்கலங்
கண்ணியன் மண்ணளந்த
நெடியான் சிறுவன் கொ[லோவறி
யேனோர்] நெடுந்தகையே.

—பாண்டிக்கோவை.

வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட்சேய்
வடிவே போலத்
தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி மாவினவித்
தணந்தோன் யாரே
தண்டளிர்ப் பிண்டித்
தழையேந்தி வந்துநம்
பண்டைப் பதிவினவிப் பாங்கு பட[மொழிந்து
படர்ந்]தோ னன்றே.

—பழம்பாட்டு.

கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்த லழித்துப் போனா ரொருவர்
பொய்த லழித்துப் போனா ரவர்நம்
மையன் மன[ம்விட் டகல்வா ரல்ல]ர்.

—சிலப்பதிகாரம் - கானல்-43.

கானல் வேலிக் கழிவாய் வந்து
நீநல் கென்றே நின்றா ரொருவர்
நீநல் கென்றே நின்றா ரொருவர்நம்
மானேர் நோக்க மறந்தா ரல்லர்.

— ஷை 44.

அன்னந் [துணையோ டா]டக் கண்டு
நின்னை நோக்கி நின்று ரொருவர்
நின்று ரவர்நம் நெடுங்கண் விட்டுப்
பொன்றாழ் சுணங்கிற் போவா ரல்லர்.

— ஷ 45.

[செம்ம] லொருவன் செறிபூந் தழையேந்தி
மம்மர் பெருகி வனப்பழித்து — நம்முடைய
நன்பூம் புனமகலான் நாமதற்குச் செய்வதுமற்
றென்பூங் குழலா [யியம்பு.]

— கிளவித்தெளிவு.

வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தலென்பதுஎன்னையும் நோக்கி யலவனையும் நோக்கித் தம்முணர்வொழியப் போனரொரு.[.ரெனச் சொல்லுதல்.

அதற்குச் செய்யுள்:—

நீகண் டனையெனின் வாழலை நேரிழை யம்பலத்தோன்
[பெடையின்
சேய்கண் டனையன்சென் றுங்கோ ரலவன்றன் சீர்ப்
வாய்வண் டனையதொர் நாவற் கனிநனி நல்கக்கண்டு
பேய்கண் டனையதொன் றாகிநின் றானப் பெருந்தகையே.

— திருக்கோவை - 84.

பாடுஞ் சிறை[வண் டறை]பொழிற் [பாழிப்]பற் றுவரச
ரோடுந் திறங்கண்டகோன்கொல்லிக் கானலுறுதுணையோ
டாடு மலவற் புகழ்ந்தென்னை நோக்கி [யறிவொழிய
நீடுநினைந்துசென் றுனென்ன லாங்கோர் நெடுந்தகையே.]

—பாண்டிக்கோவை.

* * *

['உள்ளத் துணர்ச்சி தெள்ளிதிற் கரந்து
கிழ]வோ டேஎத்துக் குறையுறூஉ முளவே
குறிப்பறி வுறூஉங் காலை யான்'

—இறை-10.

என்னுஞ் சூத்திரத்துட் கண்டுகொள்க.



நாணொடு சூழலென்பது... ...விதாகச் சொல்லக் கேட்ட தலைமகள் தனதாற்றுமையிற் சொற் பிறவாது நிற்ப முன்னின் றாற்றுமை நீங்க நாணுவந்தடையத் தலைமகள் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

சங்கந் தருமுத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு
துங்க மலிதலை யேந்தலி னேந்திழை தொல்லைப்பன்மா
வங்க மலிகலி நீர்தில்லை வானவ னேர்வருமே.

—திருக்கோவை-85.

கணிநிற வேங்கையுங் கொய்துங் கலாபம் பரப்பிநின்று
மணிநிற மாமயி லாடலுங் காண்டும்வல் லத்துவென்ற
துணிநிற வேன்மன்னன் தென்னர் பிரான்சுடர் தோய்
லணிநிற மால்வரைத் தூநீ ரருவியு மாடுதுமே. [பொதியி

—பாண்டிக்கோவை.

காணாய் தோழிநம் மேனற் றண்புனம்
பேணு மனன போய்ப்புறங் கொடுத்தென
வல்வேற் றூனை வெள்வரிச்
செவ்வாய்ப் பாசினங் கவர்ந்துகொண் டனவே.

—பொருளியல்.

வெள்ளிய வள்ளத்து ளேந்தும் விரைச்சுண்ணத்
துள்ளகத்தி ணொண்பவளம் வைத்தாங்குத்—தெள்ளுநீர்க்
கானலெல்லாம் பூக்குமே புன்னை களிவண்டு
பானலெல்லாம் பாடுந் துறை.

—கிளவிமாலை:

வங்கமு மீனெறியு மாக்களு மீன்சுறவும்
பொங்குந் திரையும் பொருகடலு—மிங்கிவை
தேர்த்திரளுங் காலாளுந் திண்களிறும் வெம்பரியும்
போர்க்களமும் போலும் பொலிந்து.

—கிளவித்தெளிவு.

இதனை அறியாள் போன்று குறியாள் கூறலென்று சொல்லுவாருமுளர். (௩௫)

முகம்புகு கிளவி யென்பது தோழி தலைமகளது உடன் பா[ட்]டான் முகங்கண்டு உள்புக்குரைத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ணல் தன்னொருபா
லவளத்த னாமக னாந்தில்லை யானன் னுரித்ததன்ன
கவளத்த யானை கடிந்தார் கரத்தகண் ணார்தழையுந்
துவளத் தகுவன வோசுரும் பார்குழற் றூமொழியே.

—திருக்கோவை - 112.

பன்னிய தீந்தமிழ் வேந்தன்
　　பராங்குசன் பாழிவென்ற
மன்னிய சீர்மன்னன் கொல்லிநம்
　　வார்புனங் கட்டழித்துத்
தின்னிய வந்த களிறு
　　கடிந்த சிலம்பன்றந்த
பொன்னியல் பூண்மன்னுங் கைவ
　　வோமற்றிப் பூந்தழையே.

—பாண்டிக்கோவை.

சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
வலங்குகுலைக் காந்த ளண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளுங் குன்ற நாடன்
உடுக்குந் தழைதந் தனனே யாமஃ
துடுப்பின் யாயஞ் சுதுமே கொடுப்பிற்
கேளிடைக் கேடஞ் சுதுமே யாயிடை
வாடுப கொல்லோ தாமே யவன்மலைப்
போருடை வருடையும் பாயாச்
சூருடை யடுக்கத்த கொயற்கருந் தழையே.

—நற்றிணை - 359.



[illegible]மேனுள் வெந்திறற் களிற்றின்
உறுதுய தொழித்தோனே நிறனழிந்து
வாடுப கொல்லோ மடந்தை
கோடுய ரடுக்கத்த கொயற்கருந் தழையே.

—பொருளியல்.

வாடத் தகுமோ மதுவுண்டு வண்டினமு
மாடற் சிறுசுரும்பு மல்லனவுங் — கூடப்
பொருகின்ற வார்குழையாய்... ...கட்டித்
தருகின்றேன் பைம்பூந் தழை. —கிளவித்தெளிவு.

நயந்தமை கூறலென்பது தலைமகட்குத் தழைகொடுத்த தோழி பெயர்த்துந் தலைமகற்குச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

பாசத் தளையறுத் தாண்டுகொண்
　　டோன்றில்லை யம்பலஞ்சூழ்
தேசத் தனசெம்மல் நீதந்
　　தனசென்றி யான்கொடுத்தேன்
பேசிற் பெருகுஞ் சுருங்கு
　　மருங்குல் பெயர்ந்தரைத்துப்
பூசிற் றிலளன்றிச் செய்யா
　　தனவில்லை பூந்தழையே.

—திருக்கோவை - 115.

சிலைமிசை வைத்த புலியுங்
　　கயலுஞ்சென் ரேங்குசெம்பொன்
மலைமிசை வைத்த பெருமான்
　　வரோதயன் வஞ்சியன்னாள்
முலைமிசை வைத்துமென் ரேண்மேற்
　　கிடாயுமொய் பூங்குழல்சேர்
தலைமிசை வைத்துக்கொண் டாளண்ணல்
　　நீதந்த தண்டழையே. —பாண்டிக்கோவை.

செங்கையில் வாங்கித் திருமுடி
சேர்த்தி விழியிலொற்றிக்
கொங்கையின் மேல்வைத்துக் கொண்டுநின்
ருள்கும ரித்துறையுங்
கங்கையு மாடுங் கடகளிற்
ருன்வங்கர் காவலவன்
பொங்கெயில் சூழ்த்தடங் தைப்பொருப்
பாதந்த பூந்தழையே.

—வங்கர்கோவை.

தந்து நீயளித்த தண்டழை காண்[ட]லும்
வந்தன ளெதிர்ந்த மடந்தை நெஞ்சம்
மண்மிசை விளங்கிய வழுத்தூர் மதிதா
னுண்ணிய றமிழி னுழைபொரு[ள்] தெளித்த
வாய்மொழி யமிழ்த மடுத்தவர் மனமென
யானிலை பெற்றன் றியானறிந் திலனே.

—பொருளியல்.

சேர்க்கு முலைமேற் சிறியோர் பெரும்பொருள்போற்
பார்க்கு மறைக்கும் பலகாலும்—கார்க்கொடையால்
வன்கைக் கலிகடந்த வன்னுட னெய்தல்வாய்
நின்கைத் தழைவாங்கி நின்று.

—கிளவிவிளக்கம்.

வட்ட முலையில் மலர்க்கண்ணில் வார்குழலிற்
பட்ட படியைப் பகர்வதோ—மட்டவிரி
கந்தநறுங் கூந்தற் கனங்குழைக்குக் காவலநீ
தந்தநறுஞ் சாரற் றழை.

—கிளவித்தெளிவு.

இவையெல்லாம்
'தன்னுட் குறிப்பினை யருகுந் தோழிக்கு
முன்னுறு புணர்ச்சியி னருகலு முண்டே' —இறை-11.



என்னுஞ் சூத்திரத்திற் கண்டுகொள்க.

இடங்காட்ட லென்பது நயந்தமை கூறிய தோழி தலைமகற்குக் குறிப்பினாற் பகற்குறியிடங் காட்டுதல். அதற்குச் செய்யுள்:—

வானுழை வாளம் பலத்தரன்
குன்றென்று வட்கிவெய்யோன்
றானுழை யாவிரு ளாய்ப்புற
நாப்பண்வண் டாரகைபோற்
றேனுழை நாக மலர்ந்து
திகழ்பளிங் கான்மதியோன்
[கானுழை] வாழ்வுபெற் ருங்கெழில்
காட்டுமொர் கார்ப்பொழிலே.

—திருக்கோவை-116.

மருள்போற் சிறைவண்டு பாடி
நிலவன்ன வார்மணன்மே
லி[ருள்போற் கொ]ழுநிழற் பாயறிந்
தார்கட்கின் றீர்ந்தமிழின்
பொருள்போ லினிதாய்ப் புகழ்மன்னன்
மாறன் பொதியிலர்கோ
னருள்போற்[குளிர்]ந்தன்ன முந்துன்னு
நீர்த்தெங்க ளாடிடமே.

—பாண்டிக்கோவை.

ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்து மன்றே சிறுகான் யாறே
இரைதேர் வெண்குரு கல்லதி யாவதுந்
துன்னலோ வின்றே பொழிலே யாமெங்
கூழைக் கெருமண்[ஞ்] சே(ர்)றும்
யாண்டும் வருகுவள் பெரும்பே தையே.

—குறுந்தொகை-113.

கழைகெழு திண்சினைப் பன்மரந் துவன்றிய
மழைதவழ் பூம்பொழில் யாவரும்
விழைதகைத் தம்ம வியன்புன மருங்கே.

—பொருளியல்.

தாது விரிபொழிலுந் தண்டுறையும் புண்டரிகப்
போது விரிகழுநீர்ப் பொய்கைகளு—மீது
நெருக்குங் குருகினமு நெஞ்சுருக நம்மை
யுருக்குந் தனியிடமொன் றுண்டு.

—களவித்தெளிவு.

குருகு பெடையென்று கோலப் பணிலத்
தருகணையும் பூங்காவிற் றுரு—முருகவிழும்
பூந்தண்டார்க் கண்டன் புனனாட் டியர்செல்வ
யாந்தண்டா வாழு மிடம்.

—கண்டனலங்காரம்.

இடத்துய்த்த லென்பது தலைமகற்குத் தோழி யிடங் காட்டி மீண்டுந் தோழி தலைமகளுழைச் சென்று அவளைத் தலைமக னின்றவிடத்துச் செலவிடுத்தல். அதற்குச் செய்யுள்:—

புயல்வள ருசன்முன் னடிப்பொன்
னேபின்னைப் போய்ப்பொலியும்
அயல்வளர் குன்றினின் றேற்று
மருவி திருவுருவிற்
கயல்வளர் வாட்கண்ணி போதரு
காதரந் தீ[ர்]த்தருளுந்
தையல்வளர் மேனிய னம்பலத்
தான்மலைத் தண்புனத்தே.

—திருக்கோவை-117.



எனலுங் காத்துச் சிலம்பெதிர் கூவி யிளமரப்பூங்
கானமுங் காணுதும் போதரு நீதண் கமழ்மதத்த
கானகஞ் சேர்களி வேழப் படைதங்க மங்கைவென்ற
மீனவன்கோலப்பொழில்சூழ்பொதியிலெம்வெற்பிடத்தே

—பாண்டிக்கோவை.

வண்டறை பூங்கா மயிலாட லுஞ்சிறந்த
வெண்டுவலை வாளருவி வீழ்தலுங்—கண்டருள
ணா(?மா)ந்தளிரின் சீர்மலைந்த வண்சீ றடிமடவாய்
போந்தருள்க நம்பைம் புனத்து.

—பழம்பாட்டு.

இடத்துய்த்தகற லென்பது தலைமகளைத் தோழியிடத் துய்த்துத் தலைமகனை யெதிர்ப்படுவ ளென்னு மிடத்துத் தான் நீங்குதல். அதற்குச் செய்யுள்:—

நரல்வே யினநின தோட்குடைந் துக்கநன் முத்தஞ்சிந்திப்
பரல்வே யறையுறைக்கும் பஞ்சடிப் பரன்றில்லை யன்னாய்
[குழற்கீரங்
வரல்வே[ய்] தருவனிங் கேநிலுங் கேசென்றுன் வார்
குரல்வே யளிமுரல் கொங்கார் தடமலர் கொண்டுவந்தே.

—திருக்கோவை - 119.

அஞ்சிறை வண்டறை காந்தளம்
போதுசென் றியான்றருவன்
பஞ்சுறை சேரல்கு லாய்வரற்
பாற்றன்று பாழியொன்னார்
நெஞ்சுறை யாச்சென்ற வேன்[மன்]னன்
சார னெடுவரைவாய்
மஞ்சுறை சோலை வளாய்த்தெய்வ
மேவு வரையகமே.

—பாண்டிக்கோவை.

முல்லை மலர்நின் முடிமலராக் கொண்டியா
னெல்லை வருவ னெரு[வெ]ப[ா]ருப்பன்—றில்லைநக
ராரணங்கே யிங்கேநி லங்கே வரின்மன்னுஞ்
சூரணங்கே செய்யுந் தொடர்ந்து.

—கிளவித்தெளிவு.

எதிர்ப்படுத லென்பது தலைமகளைப் பகற்குறியிடத்து நிறுத்தித் தோழி நீங்கத் தமியளாய் நின்ற தலைமகளைத் தலைமக னெதிர்ப்படுதல். அதற்குச் செய்யுள்:—

படமா சுணப்பள்ளி யிக்குவ டாக்கிய பங்கயக்கண்
நெடுமா லெனவென்னை நீநினைந் தோநெஞ்சத் தாமரையே
யிடமா யிருக்கலுற் றோதில்லை நின்றவ னீர்ங்கயிலை
வடமார் முலைமட வாய்வந்து வைகிற்றிவ் வார்பொழிற்கே.

—திருக்கோவை - 120.

பங்கய நாண்மலர் தான்வறி தாகப் படித்தலமே
லிங்கிரு பாதங்க ளேவ நடந்துவந் திப்பொழில்வாய்த்
தங்கிய காரண மென்னீ நினைந்து தடவரைவாய்ச் [யே.
செங்கயல் தாம்வைத்த தென்னவ னாட்டன்ன சேயிழை

—பாண்டிக்கோவை.

நடந்த தெங்குநின் றெங்கின நடப்பது
நம்மையோ கமலத்து
மடந்தை யென்பது வந்தது வரவொரு
வாசகந் தந்தாலோ
கடந்த ருங்களிற் றண்ணல்சீ வலவன
களவழி நன்னாட்டிற்
றொடர்ந்து வண்டினம் பின்வர முன்வருந்
துடியிடை மடவீரே.

—பழம்பாட்டு.

கோலஞ்செய் துரைத்தலென்பது எதிர்ப்பட்டுப் புணர்ந்த தலைமகன் றலைமகளைக் குழலுங் கோதையுந் திருத்த



வாற்றுளாகிய தலைமகட்குத் தலைவனுரைத்தல். அதற்குச் செய்யுள்:—

அளிநீ டளகத்தி னட்டிய தாது மணியணியு [வுண்
மொளிநீர் சுரிகுழற் சூழ்ந்த வொண்மாலையுந் தண்ணற
களிநீ யெனச்செய் தவன்கடற் றில்லையன் னாய்கலங்கல்
தெளிநீ யனையபொன் னேபன்னு கோலந் திருநுதலே.

—திருக்கோவை - 122.

கொடியார் நுணுகிடை தான்புனை கோல மெனக்குலவும்
படிநான் புனைந்தனன் பாவாய் வருந்தல் பறந்தலைவாய்
வடிவா ரிலங்கையில் மன்னரை வென்ற வழுதிசெம்பொ
னடிநாண் மலரிணை சூடா மடந்தையர் போலயர்ந்தே.

—பாண்டிக்கோவை.

பேதுறல் வாழிநின் காதற் றோழி
கைபுனை கோல மெ(ன)ப்பெற் றன்றே
யையம் யாவது மின்றிப்
பெய்பூங் கோதை பெருங்கவின் கொளலே.

—பொருளியல்.

உண்மகிழ்ந் துரைத்தலென்பது இவ்வகை கோலஞ் செய்தற் காற்றுளாகிய தலைமகளை யாற்றுவித்துத் தலைவன் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம் பலவன் றிருக்கழலே
கெழுநீர் மையிற்சென்று கிண்கிணி வாய்க்கொள்ளுங் கள்
கழுநீர் மலரிவள் யானதன் கண்மரு விப்பிரியாக் [ளகத்த
கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை யளிக்குலமே.

—திருக்கோவை - 123.

பூவார் கணியும் புரவியுந் திங்களும் வெங்கடவும்
தேவா தியவிவை தம்முடன் சேரப் பிறந்தெழுந்த
மூவா மருந்திவ ளாங்கது தன்னை முகந்துமுன்னா
ளோவா தருந்து மவர்க[ே]ள யானென்ன வுன்னுவனே.

—பழம்பாட்டு.

மணிநீர்ப் பொய்கை யணிபெற நிவந்த
தாமரை யனையளித் தாமலர்க் கண்ணி
ஞாயிற் றனையன் யானே யாவதும்
வெஞ்சொல் யான்வியந் துரைப்பவு
மெஞ்சாக் கவினிவ ணெய்த லானே.

—பொருளியல்.

கொண்டு நீங்க லென்பது இவ்வகை யுணர்த்துந் தலைமகன் நீங்கினவிடத்துத் தோழி தலைமகளைக் கொண்டு நீங்குதல். அதற்குச் செய்யுள்:—

பொன்னனை யான்றில்லைப் பொங்கர வம்புன் சடை [மிடைந்த
மின்னனை யானருண் மேவலர் போன்மெல் விரல்வருந்த
மென்னனை யாய்மறி யேபறி யேல்வெறி யார்மலர்க
ளின்னன யான்கொணர்ந் தேன்மணந் தாழ்குழற் கேய் [வனவே.

—திருக்கோவை - 125.

வில்வளர் தானை விறன்மிகும்
வேணாட் டரசர்வெம்மைக்
கல்வளர் கானம் புகச்செற்ற
கைதவன் கார்ப்பொழில்வாய்
மெல்விர னோவ மலர்பறி
யாதொழி நீவிரைத்தே
னல்வளர் கூந்தற்கி யான்கொணர்ந்
தேன்மல ராயிழையே.

—பாண்டிக்கோவை.

நறும்பூங் கண்ணியும் பெருந்தண் கோதையும்
நகைவாய்ப் பிணையலு முகைவாய்ச் சூட்டும்
புனைந்தனை யருளல் வேண்டும்
சினங்கெழு கானவன் செழுமட மகளே.

—பொருளியல்.



வாய்விடுகிளவி யென்பது இவ்வகை செல்லாநின்றகாலத்துப் பகற்குறிவந் தொழுகாநின்ற தலைமகனைக் காணும் பொழுதிற் காணாப்பொழுது பெரிதாகலின் ஆற்றாளாகிய தலைமகள் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

ஏர்ப்பின்னை தோண்முன் மணந்தவ
னேத்த வெழிறிகழுஞ்
சீர்ப்பொன்னை வென்ற செறிகழ
லோன்றில்லைச் சூழ்பொழில்வாய்க்
கார்ப்புன்னை பொன்னவிழ் முத்த
மணலிற் கலந்தகன்றார்
தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ்சென்
கொலாமின்று செய்கின்றதே.

—திருக்கோவை - 273.

பொருமா மணிமுடிப் பூலந்தை மன்னரைப் பூவழித்த
குருமா மணிவண்ணன் கோநெடு மாறன் குமரிமுன்னீ
ரருமா மணிதிகழ் கானலின் வாய்வந் தகன்றகொண்கன்
றிருமா மணிநெடுந் தேரொடுஞ் சென்றதென் சிந்தனையே.

—பாண்டிக்கோவை.

வருவஃது கொல்லோ தானே வாரா
தவணுறை யேவ லிசைவது கொல்லோ
புனவர் கொல்லையிற் புகவரு மஞ்ஞை
பொன்னிணர் வேங்கை மிசைவண் டாலக்
கவையிசை யிருந்து குருவி வருத்துறப்
ப(ர)ந்தாடு மகளிரிற் றோன்றுங்
குன்றுகெழு நாடனொடு சென்றவெ னெஞ்சே.

—ஐங்குறுநூறு - 295.

குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தியக்

கண்களி பெறூஉங் கவின்பெறு காலை
யெல்வளை நெகிழ்த்தோர்க் கல்ல [லு]றீஇச்
சென்றவெ னெஞ்சஞ் செய்வினைக் க(ா)சாவா
வொருங்குவர னசைஇ வருந்துங் கொல்லோ
அருளா ராகலி னழிந்திவண் வந்து
தொன்னல மிழந்தவென் பொன்னி [ற] னோக்கி
யேதி லாட்டி யிவளெனப்
போயின்று கொல்லோ நோ[ய்] தலை மணந்தே.

—நற்றிணை - 56.

அடும்பின் மென்கொடி துமியக் கடும்பகற்
கொடுங்கழி மருங்கின் வந்தருள்
நெடுந்தேரண்ணல்பின் சென்றதென் னெஞ்சே.

—பொருளியல்.

எவ்விடத் தென்செய்த தென்றறியே னிப்போதைக்
கிவ்விடத்தி லென்னுழைவந் தெய்தாதே—வெவ்வினை
இன்னலே கூர வினிதளித்தார் தேரின்பின் [யேன்
னென்னலே போனவென் னெஞ்சு.

—கிளவித்தெளிவு.

பொழுதினுக் கிரங்க லென்பது இவ்வகை சொல்லி யாற்றாளாகிய தலைமகள் அந்திப்பொழுதுகண்டு இரங்கல். அதற்குச் செய்யுள்:—

பகலோன் கரந்தனன் காப்பவர் சேயர்பற் றற்றவர்க்குப்
புகலோன் புகுநர்க்குப் போக்கரி யோனெவ ரும்புகலத்
[னவா
தகலோன் பயிறில்லைப் பைம்பொழிற் சேக்கைகணோக்கி
மகலோங்கிருங்கழிவாய்க்கொழு மீனுண்ட வன்னங்களே.

—திருக்கோவை - 188.



வெய்யவன் போயினன் மேவிப்
புணர்ந்தவர் விட்டகன்றார்
உய்யநெஞ் செவ்வகை யொன்றையுங்
காண்ப னொலிகடல்சூழ்
வையகங் காவலன் மாறன்
குமரியின் வாயிரைதேர்
நொய்யவண் டோகைவண் டானமுஞ்
சேக்கைக ணோக்கினவே.

—பாண்டிக்கோவை.

போகக் கடவன புள்ளென் றிருந்திலம் போந்துதுணை
யாகக் கடவன வென்றிருந் தேமகி லாண்டமெல்லாந்
[தொறு
தியாகக் கொடிகொண்ட கண்டன் புகாரிற்றஞ் சேக்கை
மேகத் தொடங்கின வேயந்தி வாயெம்மை யிட்டுவைத்தே.

—பழம்பாட்டு.

பொழுதுகண் டா[ய்] புகு கின்றது
போதநம் பொய்யற்கெம்மைத்
தொழுதுகொண் டாளென்று சொல்லுகண்
டாய்தொல்லை நூல்வரம்பை
முழுதுகண் டான்முனிந் தார்தம
தென்னைமுன் னிக்குறும்பிற்
பழுதுகண் டானந்தி மல்லையங்
கானற் பனிக்குருகே.

—நந்தி[க்]கலம்பகம்-4.

ஆய்கதிர்ச் செல்வ னத்தஞ் சேர்ந்தென
நோய்கூர் நெஞ்சி னழைப்பப்
போயின மாதோ புள்ளினம் பிரிந்தே.

—பொருளியல்.

பூடருறுகிளவி யென்பது இவ்வகை சொல்லி யாற்று ளாகிய தலைமகடனது உள்ளக்கவலை கண்டு தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

பொன்னு மணியும் பவளமும் போன்று பொலிந்திலங்கி
மின்னுஞ் சடையோன் புலியூர் விரவாதவ[ரி]னுண்ணேய்
இன்னு மறிகில வாலென்னை பாவ மிருங்கழிவாய் [ளே.
மன்னும் பகலே மகிழ்ந்திரை தேரும்வண் டானங்களே.

—**திருக்கோவை** - 189.

அன்னம் புரையு நடையாள்
புலம்பெய்த வத்தமென்னும்
பொன்னஞ் சிலம்பு கதிரோன்
மறை(த்)தலும் போயினவாற்
றென்னன் றிருமால் கழனெடு
மாறன் றிருந்துசெங்கோல்
மன்னன் குமரிக் கருங்கழி
மேய்ந்தவண் டானங்களே.

—**பாண்டிக்கோவை.**

மாலை மணந்து காலை பிரியுங்
காதல ருடையையோ கறையியங்கு மதியே
யிரவே யாயி னல்லை பகலே
மெல்லியற் கொடிச்சி நுதலினும்
புல்லென் றனையா னேகோ யானே.

—**பொருளியல்.**

வருந்துதல் கிளத்த லென்பது நீர் வரையாதொழியின் எம்பெருமாட்டி வருந்துவள்: வரைவுணர்த்துமிடத்து நீர் வருந்துதிர்: ஆதலா லிரண்டானும் எனக்கே மிக வருத்த முடைத்தெனத் தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—



மன்னுந் திருவருந் தும்வரை யாவிடி னீர்வரைவென்
றுன்னு மதற்குத் தளர்ந்தொளி வாடுதி ரும்பரெல்லாம்
பன்னும் புகழ்ப்பர மன்பரஞ் சோதிசிற் றம்பலத்தான்
பொன்னங் கழல்வழுத் தார்புல னென்னப் புலம்புவனே.

—**திருக்கோவை** - 131.

வரையா விடின்மதி வாணுதல் வாடும் வரைவுரைத்தால்
விரையா டியகண்ணி வேந்தநீ வாடுதி விண்டெதிர்ந்த
நிரைதா ரரைசரை நெல்வேலி வென்ற நெடுந்தகைசீர்
உரையா தவரென யானே புலம்புத லுற்றனனே.

—**பாண்டிக்கோவை.**

இன்றறிந்தே னென்பது இதற்குமுன் (னல்லது) கடவுளாக வல்லது நினையேன் (எனச் சொல்லுதல்): இவளை மக்களுள் ளொருமக ளென்பது இன்றறிந்தேன்: எனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

மாடஞ்செய் பொன்னக ருந்நிக
ரில்லையிம் மாதர்க்கென்னப்
பீடஞ்செய் தாமரை யோன்பெற்ற
பிள்ளையை யுள்ளலரைக்
கீடஞ்செய் தென்பிறப் புக்கெடத்
தில்லைநின் றோன்கயிலைக்
கூடஞ்செய் சாரற் கொடிச்சியென்
றோநின்று கூறுவதே.

—**திருக்கோவை** - 129.

சுடர்திரி வானிடம் போதா வகைதொல் லுலகில்வந்த
கடவுளர் தாமென யானினைந் தேனெழு காசினிகாத்
தடல்புரி தானை யரிகேசரிவட கொல்லியின்வாய்
மடமக ளாவதை யின்றறிந் தேன்மதி வாணுதலே.

—**பாண்டிக்கோவை.**

இதற்கொண் டி[னி]யான் றெளிந்து மேனாண்
மதிக்கோடு [து]ஞ்சு மால்வரை வாழ்க்கைக்
கடவுள ராக வல்லது
மடவரன் மாதரை மதித்தன்று மிலமே.

—பொருளியல்.

குடித்திறங் கூறலென்பது இவ்வகை சொல்லக்கேட்ட தோழி யெமது தந்தையுந் தாயரு மலைக்கானவர்: ஏனல் எங்காவல்: எனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

வேய்தந்த வெண்முத்தஞ் சிந்துபைங் கார்வரை மீன்பரப்
சேய்தந்த வானக மானுஞ் சிலம்பதன் சேவடிக்கே [பிச்
யாய்தந்த வன்புதந் தாட்கொண்ட வம்பல வன்மலையத்
தாய்தந்தை கானவ ரேனலெங் காவலித் தாழ்வரையே.

—திருக்கோவை - 130.

வானவர் நாதன் மணிமுடி மேற்பொன் வளையெறிந்த
கோனவ னாரம் புனைந்தவன் சூழ்பொழிற் கொல்லியின்
[வாய்
ஏனலெங் காவலா[ம்] யாய்தந்தை யிந்தப் பெரும்புனத்
கானவ ரா(ன)(?லி)து வென்னீ யுரைப்பது காவலனே.[துக்

—பாண்டிக்கோவை.

வரைதல் வேட்டனி ராதலிற் பதிவ(ா)யி
னெதிர்கோட் செவ்விய ரெமரே (?) வவியி
னறுநுதற் பெருந்தோட் பேதையுஞ்
சிறுகுடிக் கானவன் பெருமட மகளே.

--பொருளியல்.

இற்செறிவுரைத்த லென்பது இவ்வகைச் செ(ா)ல்லா நின்ற காலத்துப் பகற்குறிவந் தொழுகாநின்ற தலைமகற் குக் குறிப்பினாற் றமது இற்செறி வுரைத்தல். அதற்குச் செய்யுள்:—



ஈவிளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்று [யலைப்
வேய்விளை யாடும்வெற் பாவுற்று நோக்கியெம் மெல்லி
போய்விளை யாடலென் றாளன்னை யம்பலத் தான்புரத்துத்
தீவிளை யாடநின் றேவிளை யாடி திருமலைக்கே.

—திருக்கோவை - 133.

நீர்வண்ண வெண்டிரை மேனின்ற
வேந்தனெல் வேலியொன்னார்
போர்வண்ணம் வாட்டிய பூழியன்
பூந்தண் குருந்தொசித்த
கார்வண்ணன் போல்வண்ணன் காவிரி
நாடன்ன காரிகையா
ளோர்வண்ண நோக்கிநின் றென்னையு
நோக்கின ளெம்மனையே.

—பாண்டிக்கோவை.

நாகைக் குலமுகில் மமமததன பூவகைகக னாண்மலர்மேற்
ரோகைக் குரியவன் சோனக் குரியவன் றுங்கவெற்பா
பாகைத் தருசொல்லி மென்முலைப் பாரமும் பார்த்திடை
[யென்
னாகைக்கிருந்ததென்றாளெம்மைநோக்கிநின்றம்மனையே.

--பழம்பாட்டு.

அன்னை வாழி நெருநன் மாதர்
மென்முலை யிரும்பிய வாகமு
[ெ]மன்னும் பன்முறை நோக்கினள் பெரிதே.

—பொருளியல்.

அன்னை நெருந லணியிழையாள் கொங்கையையும்
என்னையும் நோக்கி யிருவரையும்—புன்னை
வளையாடு கானல்வாய் மானனையீ ரின்று
விளையாடு(?ட)மெ(?ல)ன்றாள் விளைந்து.

—கிளவித்தெளிவு.

சிறைப்புறக் கிளவியென்பது இவ்வகைக் குறிப்பினுல் இற்செறி வுரைத்த தோழி முன்னிலைப் புறமொழியாக வேங்கைக் குரைப்பாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

கணியார் கருத்தின்று முற்றின்
றியாஞ்சென்றுங் கார்ப்புனமே
மணியார் பொழில்காள் மறத்திர்கண்
டீர்மன்னு மம்பலத்தோன்
அணியார் கயிலை மயில்கா
ளயில்வே லொருவர்வந்தாற்
றுணியா தனதுணிந் தாரென்னு
நீர்மைகள் சொல்லுமினே.

—திருக்கோவை - 145.

உலம்புரி தோண்மன்ன ரோடவல்
லத்தட் டவருரிமை
நலம்புரி கோதையர்க் கல்லல்கண்
டான்கொல்லிச் சாரணண்ணி
வலம்புரி வில்லோ டிருவிப்
புனங்கண்டு வாடிநின்றாற்
பு(? சி)லம்பு(? ப)னை நையற்க வென்னுங்கொல்
வேங்கைச் செறிபொழிலே.

—பாண்டிக்கோவை.

திரையார் குருதிப் புனல்மூழ்கச்
செந்நிலத் தன்றுவென்று
புரையார் பெரும்புகழ்ச் செங்கோ
லுசிதனெண் பூம்பொதியில்
வரையார் தினைப்புனங் கால்கொய்ய
நன்னாள் வரைந்துநின்ற
விரையார் மலரிள வேங்காய்
நினக்கு விடையில்லையே.

—பாண்டிக்கோவை.



பாங்கின ராகித் தீங்குதலைத் தருந
நீங்குப் பிரிவு சூழ்ந்தனர்
யாங்கன மொழிமோ வேங்கையது நிலையே.

—பொருளியல்.

வெளிப்பட வுரைத்தலென்பதுயாம் இப்புனங்காவேம்: நீர் பலகால் வாரன்மின்: எனத் தோழி தலைமகன்முன் னின்று சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

வடிவார் வயற்றில்லையோன்மலயத்துநின் றும்வருந்தேன்
கடிவார் களிவண்டு நின்றலர் தூற்றப் பெருங்கணியார்
நொடிவார் நமக்கினிநோதகயானுமக் கென்னுரைக்கேன்
றடிவார் தினையெமர் காவேம் பெருமவித் தண்புனமே.

—திருக்கோவை - 139.

செயன்மன்னு மாவது சொல்லாய் சிலம்பதென் பாழி [வென்ற
கயன்மன்னு வெல்கொடிக் காவலன் மாறன் கடிமுனைமே
லயன்மன்னர் போற்கொய்துமாள்கின்ற தா[ல]ணி வானு [ரிஞ்சும்
புயல்வளர் (?மன்னு)கோட்ட மணிவளர் சாரலெம் பூம் [புனமே.

—பாண்டிக்கோவை.

ஊச ஞெழிலிழக்கு மொப்பு மயிலிழக்கும்
வாசங்(?ஞ்) த(?சு)னையிழக்கும் வள்ளலே—தேசு
பொழிலிழக்கும் நாளையே பூங்குழலி நீங்க
எழிலிழக்கு மந்தோ விதண்.

—கண்டனலங்காரம்.

பண்சிலம்ப வண்டாடும் பைந்தார்ச் சனநாதன்
வண்சிலம்பிற்(?)கூடல் வளைந்தாலும்—தண்சிலம்ப
மான்பாயும் வேங்கையிலு மாரு தலைத்திடுமித்
தேன்பாயும் வேங்கை சிவந்து.

—கண்டனலங்காரம்.

கணியென வுரைத்த லென்பது வேங்கை பூத்துப் பருவ மாகத் தினைகொய்யக்கண்ட தோழி தலைமகட்குச் சொல்லியது. அதற்குச் செய்யுள் வருமாறு:—

மாதிடங் கொண்டம் பலத்துநின்
றோன்வட வான்கயிலைப்
போதிடங் கொண்டுபொன் வேங்கைத்
தினைப்புனங் கொய்கவென்று
தாதிடங் கொண்டுபொன் வீசித்தன்
கள்வாய் சொரியநின்று
சோதிடங் கொண்டிதெம் மைக்கெடு
வித்தது தூமொழியே.

—திருக்கோவை - 138.

மொய்வார் மலர்முடி மன்னவர்
சாய முசிரிவென்ற
மெய்வான் வரோதயன் கொல்லியில்
வேங்கை கணிமைசொல்லச்
செய்வாய் விளைந்த செழுங்குரற்
செந்தினைப் போகமெல்லாங்
கொய்வான் றொடங்கின ரெம்மையர்
தாநிரை கோல்வளையே.

—பாண்டிக்கோவை.

இயவன ராசன் கலுபதி தாமுத லெண்ணவந்தோர்
அயன்மிகு தானைய ரஞ்சுவன் னத்தவ ரஞ்சலென்னுக்
கயவர்கள் வாழ்பதி போலத் தினைப்புனங் காய்கொய்து
[போம்
பயன்விளை வாம்படி பூத்தது வேங்கை பணிமொழியே.

—பல்சந்தமாலை.



நனைகெடச் செய்தில மென்பது வேங்கை யரும்பியகாலத்து அரும்பாகக் கொய்திலமெனத் தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

கனைகடற் செய்தநஞ் சுண்டுகண் டார்க்கம் பலத்தமுதாய்
வினைகெடச் செய்தவன் விண்டோய் கயிலை மலையனையாய்
நனைகெடச் செய்தன மாயி னமைக்கெடச் செய்திடுவான்
தினைகெடச் செய்திடு மாறமுண் டோவித் திருக்கணியே.

—திருக்கோவை - 141.

நன்றுசெய் தாமல்ல நன்னுத லாய்நறை யாற்றுவெம்போர்
நின்றுசெய்தாரைவ ருந்த(?து)நெடுங்கைக் களிற்றுடலாற்
குன்றுசெய் தான்கொல்லி வேங்கையை மெல்லரும்
[பாகக்கொய்த
லன்றுசெய் தாமெனி னிற்பதன் றேநம் மகன்புனமே.

—பாண்டிக்கோவை.

கரும்பனைய மென்மொழியாய் கண்ணறைவாய் வேங்கை
யரும்பினைமுன் கொய்தனமே யாகிற்—பெரும்புனத்திற்
செந்தினைநன் போக(த்)ஞ் சிதைப்பரோ சீர்சிறந்த
சந்தனவண் டோளைய[ர்] தாம்.

—பழம்பாட்டு.

எறுவிடுத்த லென்பது எமரு மெம்மையரும் வதுவை நோக்கித் துணிந்து எறுவிட்டாரென்று சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதர பாரமுநுண்
ணிடையார் மெலிவுங்கண் டண்டர்க ளீர்முல்லை வேலி·
[யெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட் டார்வியன் றென்புலியூ
ருடையார் கடவி வருவது போலு முருவினதே.

—திருக்கோவை - 136.

கூற்றென வேவரும் வேந்தரைக் கோட்டாற் றழித்தவர் [மேற்
பாற்றின மேவிடக் கண்டவன் கூடற் பதியதன்வாய்
எற்றிரு கோடு திருத்திவிட் டாரினி யேறுதழூஉ
மாற்றலி னார்மணஞ் செய்வா னமைந்தன ரண்டர்களே.

—பாண்டிக்கோவை.

விடையிரு கோடு திருத்திவிட் டனராற்
பெடைமயி ல[ன்]ன பேதை
யிடை

* *

[கள்ளாவி நாறுங் கமழ்கூந்தற் காரிகையென்
னுள்ளாவி சென்ற வுழியறியேன்—றள்ளாத
மல்ல லருவி மலைநாடி வாய்திறந்]து
சொல்லல் புரியாய் துணிந்து.

[... ...]

அகத்திணைப் பகற்குறி முற்றும்.

[இரவுக்குறி]

இரவிடங்காட்ட லென்பது இவ்வகை (எ)வறும்புனங் கண்டு வருந்திய தலைவன் தோழியை யெதிர்ப்பட்டு இரவுக்குறி வேண்டிய விடத்து அவள் இடங்காட்டுதல். அதற்குச்செய்யுள் வருமாறு:—

பனைவளர் கைம்மாப் படாத்தம்
பலத்தரன் பாதம்விண்ணோர்
புனைவளர் சாரற் பொதியின்
மலைப்பொலி சாந்தணிந்து

*'63-ம் எடு வீடுற்றது: விஷயத் தொடர்பின்று' என்பது தொன்னூல் - நிலயப்பிரதி. குளென நினைத்தல், புனங் கண்டழிதல் என்னும் இரண்டன் பகுதியும் இதன்கட் காணப்படுதல் வேண்டும்.



சுனைவளர் காவிகள் சூடிப்பைந்
தோகை துயில்பயிலுஞ்
சினைவளர் வேங்கைகள் யாங்கணின்
றுடுஞ் செழும்பொழிலே.

—திருக்கோவை - 154.

வந்தணங் காமன்னர் தேயமுன்
னுள்மழை யேறுயர்த்த
கந்தணங் காமத யானைக்
கழல்மன்னன் கார்ப்பொதியிற்
சந்தனஞ் சேர்ந்துதண் காந்தளம்
பூத்தழல் போல்விரியும்
கொந்தணங் கீர்ம்பிண்டி யாங்கணின்
றுடுங் குளிர்பொழிலே.

—பாண்டிக்கோவை.

நறைகமழ் சாந்தமெஞ் சாந்தே பூவும்
பொறைமலி காந்தளம் பூவே யாடிடஞ்
சிறைவண்டார்க்குஞ் செயலை[ய]ம் பொழிலே.

—பொருளியல்.

கள்ளவிழுங் காவி முடித்துக் கமழ்பசுஞ்சாந்
தள்ளி முடிமே லழகெழுதிப்—புள்ளுறங்கும்
வேங்கை மரநிழற்கீழ் நிற்பேம் வியன்சிலம்பா
நாங்கள் விளையாட(?டி) நன்கு.

—கிளவித்தெளிவு.

வரவுணாந்துரைத்த லென்பது தலைமகற்குக் குறியிடங் காட்டிய தோழி தலைமகளுழைச் சென்று எய்தியவிடத்து அவன்வரவறிந்தமை தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

முன்னுமொருவ ரிரும்பொழில் மூன்றிற்கு முற்றுமிற்றுந்
பின்னு மொருவர்சிற் றம்பலத் தார்தரும் பேரருள்போற்
றுன்னுமொ ரின்பமென் றேகைதன் றேகைக்குச் சொல்
[லுவ போன்
மன்னு மரவத்த வாய்த்துயில் பேரு மயிலினமே.

—திருக்கோவை - 160.

அணிநிற மால்பக டுந்திவந் தார்வல்லத் தன்றவியத்
துணிநிற வேல்கொண்ட கோன்கொல்லிச் சாரலிற் சூழ்
[பொழில்வாய்
மணிநிற மாமயி லென்னைகொல் பொன்னேர் மலர்ததை
கணிநிற வேங்கையின் மேற்றுயிலாது கலங்கினவே [ந்த

—பாண்டிக்கோவை.

பாக்கத் திரவின்கட் பட்டதொன்
றுண்டுபைங் கானலெங்கும்
சேக்கைத் துணைத்தலையோடொன்றுஞ்
சேர்ந்தில சேர்ந்துசெங்கை
தாக்கச் சிவந்த தடந்தோட்
டயாபரன் றஞ்சையன்னாய்
பூக்கட் கழித்தலைக் கெண்டைமுள்
ளோடுண்ட புள்ளினமே.

—அரையர்கோவை.

புள்ளுந் துயிற்புடை பெயர்ந்தன புனலுள்
வெள்ளிதழ்க் கைதை மணிக்காய் ததும்ப
வந்தனன் கொல்லோ தானே
வெந்திற லண்ண னினைந்தனன் விரைந்தே.

—பொருளியல்.



புட்சிலம்பு கின்றமையாற்...பூம்புனலி(?னலி)
னுட்சிலம்ப வீழ்கின்ற வோசையாற்—கட்சிலம்பு
கொந்தார் நறும்பொழிலி னுள்ள(க்) குறியிடத்து
வந்தான்கொல் கள்வ மகன்.

—கிளவித்தெளிவு.

தாய்துயிலறித லென்பது தலைமகன் குறியிடத்து வந்தமை யுணர்ந்த தோழி தாய்துயிலறிதல். அதற்குச் செய்யுள்:—

கூடா ரரணெரி கூடக் கொடுஞ்சிலை கொண்டவண்டன்
சேடான் மதிமலர் தில்லையன் ஞெய்சிறு கட்பெரு[வெ]வண்
கோடார் கரிகுரு மாமணி யூசலைக் கோப்பழித்துத்
தோடார் மதுமலர் நாகத்தை நூக்கு[ந]ஞ் சூழ்பொ
[ழிற்கே.

—திருக்கோவை - 161.

கதஞ்சார் தரும்படைக் கைதவன் காவிரி நாட்டரசன்
பதம்பாழ் படுத்திய பஞ்சவன் கூடற் பதியனையாய்
மதம்பாய் கரவொண்கண் மாமலை யொன்றுநம் வார்பு
[னத்து
ளிதண்கால் பறிந்திறத் தாளா லுதையு மிரும்பொழிற்கே.

—பாண்டிக்கோவை.

அன்னாய் காணென் றிருமுறை தன்னை
யெடுப்பவுந் துயின்மடிந் திலளே...
இலங்கிலை நெடுவே லண்ணலும்
புலம்புதுய ரகலக் கூருதி வந்தோனே.

—பொருளியல்.

இரவுக்குறி யுய்த்த லென்பது இவ்வகைத் தாய் துயிலறிந்த தோழி தலைமகளை யுடன்கொண்டு 'தாழிக்குவளை மலர்ந்தனவேற்கிாண்பாம் ; முல்லை மலர்ந்தவேற் காண்

பாம்' எனச் சொல்லிக் குறியிடத்துச் சேறல். அதற்குச் செய்யுள்:—

விண்ணுக்கு மேல்வியன் பாதலக் கீழ்விரி நீருடுத்த
மண்ணுக்கு நாப்பண் ணயந்துதென் றில்லைநின் றோன்மிடற் [றின்
வண்ணக் குவளை மலர்கின் றனசின வாண்மிளிர்நின்
கண்ணைக்குமேற்கண்டுகொண் வண்டுவொழுங் கருங்குழலே

—திருக்கோவை - 162.

ஆழிக் கடல்வையந் தாங்கிய கோனரி கேசரிதென்
பாழிப் பகைவென்ற பஞ்சவன் பைம்பூம் புறவணிந்த
பூழிப் புனமஞ்ஞை யன்னநல் லாய்கொள்கம் போதினியே
தாழிக் குவளைநின் கண்போன் மலருந் தடமல்ரே.

—பாண்டிக்கோவை.

விளக்கின்ற பல்புகழ் வேந்தன்
விசாரிதன் விண்டெதிர்ந்து
திளக்கின்ற மன்னரைச் சேவூ
ரழித்தவன் றீந்தமிழ்போல்
வளைக்கொன்று கைமங்கை யா[ய்]சென்று
க[ா]ண்டுநின் வாயுவந்து
முளைக்கின்ற வெள்ளெயிற் றேர்கொண்
டலர்ந்தன முல்லைகளே.

—பாண்டிக்கோவை.

கள்ளவிழ் கோதைநின் கண்போற் குவளையு
முள்ளெயிற் றரும்பு முல்லையுங்
கொள்குவம் போதுநங் குளிர்பொழி லிடத்தே.

—பொருளியல்.



நீங்குத லுரைத்த லென்பது குறியிடத்துய்த்த தலைமகளைத் தலைமகன் எதிர்ப்படுமென்னு நிலைமைக்கண் தான் நீங்குதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

நந்தீ வரமென்னு நாரண னுண்மலர்க் கண்ணுக்கெஃகந்
தந்தீ வரன்புலி யூரனை யாய்தடங் கண்கடந்த
இந்தீ வரமிவை காணின் னிருள்சேர் குழற்கெழில்சேர்
சந்தீ வரமுறி யும்வெறி வீயுந் தருகுவனே.

—திருக்கோவை - 163.

ஆய்போ லருளுங் கொடையரி கேசரியம்பொதியில்
வேய்போ லியவிரு தோண்மட வாய்விரைத் தேன்கமழ் [நின்
வாய்போன் மலருங் குமுதங்கள் கொய்து வருமளவும்
நீபோ திவைகொய்து நிற்பது சால நெறியுடைத்தே.

—பாண்டிக்கோவை.

நின்னிணை (நீல்)விழியி னிறம்புரை நீல
மென்னிரு கரங்கொடு கொய்தியான் கொணர்வன்
அன்னிலை மடவாய் நீவர லரிதே.

—பழம்பாட்டு.

குறியெதிர்ப்படுத லென்பது இவ்வகைக் குறியிடத்து நிறுத்தித் தோழி நீங்கியவிடத்துத் தமியளாய் நின்ற தலைமகளைத் தலைமகன் எதிர்ப்படுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

காமரை வென்றகண் ணோன்றில்லைப் பல்கதி ரோனடை [த்த
தாமரை யில்லி னிதழ்க்கத வந்திறந் தோதமியே
பாமரை மேகலை பற்றிச் சிலம்பொதுக் கிப்பையவே
நாமரை(?மரை)யாமத்தென்னோவந்துவைகி நயந்ததுவே.

—திருக்கோவை - 164.

வெவ்வினை யார்படை வேந்தர்கள்
வெண்மாத் திடைப்படவென்
றவ்வவர் வாழ்பதி கொண்டவன்
கூட லகன்பொழில்வாய்ச்
செவ்விரை நாண்மலர்ப் பாதஞ்
சிவக்கச் சிலம்பொதுக்கி
யிவ்விருள் வாய்வர வென்னீ
நினைந்தனை யேந்திழையே.

—பாண்டிக்கோவை.

மொய்யிருளி னீரே முளரி யகந்திறந்து
செய்ய வடியிற் சிலம்பொதுக்கிப்—பையவொரு
மின்வந்த தென்ன வெறுந்தனியே வந்தவா
வென்வந்து சொல்லீ ரெமக்கு.

—கிளவித்தெளிவு.

அருக்கன் வருவதன்முன் னம்புயப்பூங் கோயிற்
றிருக்கதவ மாரோ திறந்தார்—மருக்கமழ்தார்
வன்னுட னெய்தல்வாய் வல்லியிவ் வல்லிருளில்
என்னுட னீவருவா னீங்கு. —கிளவிவிளக்கம்.

[திங்கட் குரைத்தலென்பது] ...

...இவையெல்லாம் இரவுக்குறிவந் தொழுகா நின்ற நாள் அவனாற் செய்யப்படுங் குறியன்றி யல்லகுறிப்பட்டு இற்செறிந்தவிடத்துத் தோழி யவன் வரவுணர்ந்து அவ னறியச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

நாகந் தொழவெழி லம்பல நண்ணி நடநவில்வோ
னாகம் மிதுமதி யேமதி யேநவில் வேற்கையெங்க
ளாகம் வரவெதிர் நாங்கொள்ளு நள்ளிருள் வாய்நறவார்
நாக மலிபொழில் வாயெழில் வாய்த்தநின் னுயகமே.

—திருக்கோவை - 171.



தாளிணை யாமலர் சூடா வரைசரைச் சங்கமங்கை
வாளின[த்] தால்வென்ற மாறன் றிருக்குல மாமதியெங்
கேளினர் தாம்வரும் போதி னெழாதாய்க் குறுலியரோ
நாளினு நீகுறை யாதே விளங்க நலிவின்றியே.

—பாண்டிக்கோவை.

வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போதி னெழால்வாழி வெண்டிங்க[ா]ள்
கேள்வரும் போதி னெழாதாய்க் குறுலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்டிங்க[ா]ள்.

—பழம்பாட்டு.

அன்னத்தொலி யுரைத்தலென்பது இவ்வகைத் தாம் (புற) [அல்ல குறி]ப்பட்ட படியைத் திங்கண்மேலிட் டுணர்த்திய தோழி யன்னத்தொலி யுரைத்தல். அதற்குச் செய்யுள்:—

மின்னங் கலருஞ் சடைமுடி யோன்வியன் றில்லையன்ன
யென்னங் கலம்வரலெய்தியதோ வெழின்முத்தந்தொத்[திப்
பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம் புற்று
மன்னம் புலரு மளவுந் துயிலா தமுழுங்கினவே. [முற்று

—திருக்கோவை - 172.

அறைவா யெதிர்கழல் வேந்துக
வல்லத் தமரழித்த
கறைவா யிலங்கிலை வேன்மன்னன்
கன்னியங் கானலன்ன
இறைவா யணிவளை யாயென்கொ
லாமிவ் விரவினெல்லாந்
துறைவா யிளம்புன்னை மேலன்ன
மொன்றுந் துயின்றிலவே.

—பாண்டிக்கோவை.

வணர்சுரி யைம்பால் வாணுத லரிவை
யவடிற மறிதல் யாவது
புணர்துயின் மறந்தன புள்ளினம் பெயர்ந்தே.

—பொருளியல்.

கடலொலி யொலித்த லென்பது இன்று விடிவளவுங் கடலொலி யடங்கியதில்லை யெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

சோத்துன் னடியமென் றோரைக்
குழுமித்தொல் வானவர்சூழ்ந்
தேத்தும் படிநிற் பவன்றில்லை
யன்ன ளிவடுவள
வார்த்துன் னமுதுந் திருவு
மதியு மிழந்தவநீ
பேர்த்து மிரைப்பொழி யாய்பழி
நோக்காய் பெருங்கடலே.

—திருக்கோவை - 173.

அறம்புரி செங்கோ லரிகே சரிதிருத் தாளடையார்
பறந்தலை வாய்ப்பட(டு) வென்றவன் கூடற் பதியனையா
ணிறந்தவ வாட நிறமுந் திருவு முடனழிந்து
கறங்குவ தென்று மொழியாய் கழியார் கருங்கடலே.

பாண்டிக்கோவை.

புன்னை நனைப்பினும் பூஞ்சினை தோயினும்
பின்னிருங் கூந்தலெந் தோழி நடையொக்கு
மன்ன [ந]னையாதி வாழி கடலோதம்.

—பழம்பாட்டு.

புன்னை மலர்தூஉய்ப் புனத்தும் புலிக்கிடந்த
வன்னந் துயிலழித்தா ரார்கொலோ—மன்னன்
மதுரா கின்தொண்டி மாக்கடலே சொல்லாய்
முதிரா முலைபயந்த மூன்று.

—பழம்பாட்டு.



இரவுக்குறி கழித லென்பது அல்லகுறிப்பட்டு மீண்ட தலைமகன் வருந்துதல். அதற்குச் செய்யுள்:—

மாற்றே னெனவந்த காலனை யோல மிடவடர்த்த[குடுமி
கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றி னீள்
மேற்றேன் விரும்பு முடவனைப் போல மெலியுநெஞ்சே
யாற்றே னரிய வரிவைக்கு நீவைத்த வன்பினுக்கே.

—திருக்கோவை - 150.

ஏரார் குழன்மட வாளை யெளியளென் றெண்ணிவந்து
தீரா விழுமந்தந் தாய்தென்னன் சேவூர்ச் செருவடர்த்த
காரார் களிற்றுக் கழனெடு மாறன் கழல்பணிந்து
சேரா வரசரிற் றேய்வா யளியவென் சிந்தனையே.

—பாண்டிக்கோவை.

இல்லோ னின்பங் காமுற் றாஅங்
கரிதுவேட் டனையா னெஞ்சே காதலி
நல்க(?ல) ளாகுத லறிந்தாங்
கரிய ளாகுத லறியா தோயே.

—குறுந்தொகை - 120.

குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
[ய]யிரை யாரிரைக் கணவந் தாங்குச்
சேயு ளரியோட் படர்தி
நோ[ை]ய நெஞ்சே நோய்ப்பா லோயே.

—† குறுந்தொகை - 128.

வரிவளைப் பணைத்தோண் மடந்தைமை யுள்ளி
யரிதின் சைஇய நெஞ்சம்
பெரிது மெவ்வம் பெறற்பா லோயே.

—பொருளியல்.

† 'ஐங்குறுநூறு' என்பது தொன்னூல்-நிலயப் பிரதி.

அன்னநடைப் பேதை யருமை யறியாதே [ருட்கண்
யென்னை வருத்துகின்ற தென்கொலோ — துன்னி
வஞ்சமே யன்ன மலர்விழியா லீடழியும்
நெஞ்சமே கட்டுரையாய் நீ.

—கிளவித்தெளிவு.

‘ தறியெனப் படுவ திரவினும் பகலினும்
அறியக்கிட [ந்த] விடமென மொழிப’ —இறை-18.

என்னு * மொழிமாற்றுச் சூத்திரத்துள் இவையெல்லாங் கண்டுகொள்க.

இரவுக்குறி முற்றும்.

கழிபடர்கிளவி யென்பது இவ்வகை வந்து ஒழுகாநின்ற தலைமகனைக் காணும் பொழுதிற் காணப்பொழுது பெரிதாகலி னாற்றளாய தலைமகள் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

மாதுற்ற மேனி வரையுற்ற வில்லிதில் லைநகர்சூழ் [காள்
போதுற்ற பூம்பொழில் காள்கழி காளெழிற் புள்ளினங்
ஏதுற் றழுதியென் னீர்மன்னு மீர்ந்துறை வற்கிவளோர்
தீதுற்ற தென்னுக்கென் னீரிது வோநன்மை செப்பு
[மினே.

—திருக்கோவை - 174.

---

* ‘ இரவினும் பகலினும் என்றாராயினும் மொழிமாற்றிப் பகலின்கண்ணும் இரவின்கண்ணுமெனக் கொள்க. என்னை? பகற்குறி நிகழ்ந்தபின்னை இரவுக்குறி நிகழற்பாலதாகலான். அவ்வொழுக்கம் நிகழ்ந்த முறையான் நோக்கி மொழிமாற்றுச் சூத்திரமாகப் பொருளை யுரைக்கப்படும் ’—இறை, 18, உரை.



தாதலர் நீண்முடித் தார்மன்னன் மாறன்றண் ணங்குமரிப்
போதலர் கானி(?ன)ற்புணர்குறி வாய்த்தாள் புலம்பிநைய
எதிலர் நோய்செய்வ தோநின் பெருமை யெனநெருங்கிக்
காதலர் தம்மைக் கழறியெ(?னெ)னானங் கருங்கடலே.

—பாண்டிக்கோவை.

[கடந்தை
மடலே சொரிதொங்கல் வங்கர்குலோத்தமன் வண்
யடலே புரியு மரும்பனி வாடையை யஞ்சும்வஞ்சி
யுடலேயு மன்றி யுயிருங் கிடந்ததென் றேரொருகாற்
கடலே கருங்கழி யேயுரை யீரெங்கள் காதலர்க்கே.

—வங்கர்கோவை.

புள்ளி[ய]ன்மான் றேராழி போன வழியெல்லாந்
தெள்ளிநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றென்செய்கோ
தெள்ளிநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றெம்மோடிங்
குள்ளாரோ டுள்ளா யுணரார்மற் றென்செய்கோ.

—சிலப்பதிகாரம் - கானல் - 34.

ஒண்டேவி நாராய்நின் சேவலு நீயு[மாய்]
வண்டேதுங் கானல் வைகலுஞ் சே(ன்)றிராற்
பெண்டேது வந்தே மெனவுரைத்துக் காதலரைக்
கண்டீர் கழறியக்காற் காதலர் கடிபவோ.

—பழம்பாட்டு.

கையறுகிளவி யென்பது தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல் என இவைமுதலாகிய காப்புமிகுதி சொல்லி வரவு விலக்குதல். அதற்குச் செய்யுள் :—

இன்னற வார்பொழிற் றில்லை நகரிறை சீர்விழவிற்
பன்னிற மாலைத் தொகைபக லாம்பல் விளக்கிருளின்
றுன்னற வுய்க்குமில் லோருந் துயிலிற் றுறைவர்மிக்க
கொன்னிற வேலொடு வந்திடின் ஞாளி குரைதருமே.
—திருக்கோவை - 175.

வாருந்து பைங்கழற் செங்கோல்
வரோதயன் வஞ்சியன்னாள்
சேருந் திறமென்னை தேந்தண்
சிலம்பனைத் திங்கள்கல்சேர்ந்
தூருந் துயின்றிடங் காவல
ரோடன்னை யுள்ளூறுத்தெல்
லாருந் துயிலினுந் துஞ்சா
ஞமலி யரையிருளே. —பாண்டிக்கோவை.

ஆயுந் தமிழ்மன்னன் செங்கோ லரிகே சரிமுனைபோற்
றேயு நினைவொடு துஞ்சா மடந்தையிச் சேயிழையாள்
தாயுந் துயிலலு ருளின்ன தாற்றனித் தாணெடுந்தேர்
காயுங் கதிர்கான் மலைபோய் மறைந்த கனையிருளே.
—பாண்டிக்கோவை.

மாவுங் களிறு மணிநெடுந் தேரும்வல் லத்துப்புல்லாக்
கோவுந் துமியவை வேல்கொண்ட கோனந்தண் கூட
[லென்னப்
பூவும் புகையும் விரையுங் கமழ்ந்துபொன் னுருலகு
மேவும் விழைவொடு துஞ்சா திரவும் வியனகரே.
—பாண்டிக்கோவை.

[லைச
நிறைக்கண் மலிகொன்றை யோனின்று நாடக மாடுதில்
சிறைக்கண் மலிபுனற் சீர்நகர் காக்குஞ்செவ் வேலிளைஞர்
பறைக்கண் படும்படுந் தோறும் படாமுலைப் பைந்தொடி
கறைக்கண்மலிகதிர்வேற்கண்படாது கலங்கினவே.[யாள்
—திருக்கோவை - 258.



அடிக்கண் ணதிருங் கழலரி கேசரி தெவ்வழியக் [ஞர்
கொடிக்கண் ணிடியுரு யேந்திய கோன்றமிழ்க் கூடலன்
வடிக்கண் ணிரண்டும் வளநகர் காக்கும்வை வேலிளைஞர்
துடிக்கண் ணிரண்டுங்கந் குற்றலை யொன்றுந் துயின்
[றிலவே.
—பாண்டிக்கோவை.

சென்று செருமலைந் தார்செந்நீர்
மூழ்கச் செருமலைந்தார் (? செருநிலத்தை)
வென்று களங்கொண்ட கோன்றமிழ்
நாடன்ன மெல்லியலாய்
இன்றிவ் விருள்தா னிடங்கொண்ட
தெவ்விடஞ் சென்றுகொல்லோ
நின்று விசும்பிற் பகல்போல்
விரியு நிலாமதியே.
—பாண்டிக்கோவை.

இவையெல்லாம் வந்த செய்யுள் :—
இரும்பிழி மகாஅரிவ் வழுங்கல் மூதூர்
விழவின் றுயினுந் துஞ்சா தாகும்
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்
பிணிகொ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற்
றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளைஞர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி குரையாது கடியிற்
பகலுரு வுறழு நிலவுகான்று விசும்பி
னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மறையி

னில்லெலி [வல்] சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சே[வ]ல் வளர் துயின் மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பும்
எல்லா மடிந்த காலை யொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே
அதனல், அரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்
தாதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றாற் றோழிநங் களவே.

—நேடுந்தோகை - 121.

யாயே துயின்மறந் தனளே யாயினு
நாயு மூரு நனிதுஞ் சலவே
காவல ரதனினுந் துயிலார் (துயிலினு)
ஊய்கதிர் மதியமின் றலரும்
யாவ தாங்கொ லேந்திழை நிலையே.

—போருளியல்.

ஊர் துயிலி னுய்துயிலா வொண்டொடி யூர்காக்கும்
பேர் துயிலு மாறொருகாற் பெற்றாலும்—நேர் துயிலா
ளன்னை நெடுநிலா வல்லும் பகலாகு
மென்னை வருவதுநீ யிங்கு.

—கிளவித்தேளிவு.

ஆறு பார்த்துற்ற வச்சக்கிளவி யென்பது தலைமகன் வரும்வழியி னுள்ள அச்சத்தைச் சொல்லி வரவு விலக்குதல். அதற்குச் செய்யுள் :—



தாருறை கொன்றையன் றில்லைச் சடைமுடி யோன்கயிலை
நீருறை கான்யா(ற்) றளவில நீந்திவந் தானினது
போருறை [வேல்]வ[ய]ப் பொங்குரு மஞ்சுக மஞ்சிவருஞ்
சூருறை சோலையின் வாய்வரற் பாற்றன்று தூங்கிருளே.

—திருக்கோவை - 176.

பிறவா ரணங்கு ?மணிக்குறை யார்கழல் பேணினரென்
றஃறவா ரணங்க ளரற்று மரங்க ரருளிலர்போன்
மறவா ரணங்கள் மடங்கலுக் கோடும் வழிபழிவந்
துறவா ரணங்கின் பொருட்டுர வோய்வர லோங்கிருளே.

—கோயிலந்தாதி.

அன்பெதிர்ந் தாலும் வருதல்பொல்
லாதைய வாரமருள்
முன்பெதி ரார்படச் சே(வ்)வைவென்
றூன்முகி றோய்பொதியிற்
பொன்பிதிர்ந் தாலன்ன மின்மினி
சூழ்புற்றின் முற்றியசோற்
றின்பிதிர் வாங்கியெண் கேறு
வி(?கி)ளைத்துண்ணு மீண்டிருளே.

—பாண்டிக்கோவை.

பிறையார் நறுநுதற் பேதைதன் காரணத் தாற்பெரும
மறைநா ளிரவில் வருவது நீயொழி வச்சிரநாட்
டிறையா கியகலு பாமுத லானவர் யானைகணின்
றறைவாரும் விஞ்சத் தடவிகள் சூழு ம[ணி]வரையே.

—பல்சந்தமாலை.

கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருவிராயி
னரையிருள் யாமத் தடுபுலி யேறஞ்சி யகன்றுபோக
நரையுரு மேறுநுங்கை வேலஞ்சு நும்மை
வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையோ.

—பழம்பாட்டு.

சூரல் [ப]ம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வார லெனினே யானஞ் சுவனே
சார னாட நீவர லாறே.

—பழம்பாட்டு.

வார[ா] தீமோ சார னாட
வுறுபுலி கொன்ற தறுகண் யானை
யாறுகடி கொள்ளு மருஞ்சுர
மூறுபெரி [து]டை[ய] தமியை நீயே.

—சிற்றெட்டகம்.

நெடுவரை நன்னாட நீள்வே றுணையாக்
கடுவிசைப்பா(?) ளாரருவி நீந்தி—நடுவிருளி
[னின்]னு தவரலி [னெ]ஞ்கோதை மாதராள்
என்னுவ ளென்னுமென் னெஞ்சு.

—ஐந்திணை.

கல்லதருங் கான்யாறு நீந்திக் கரடிகளும்
கொல்கரியுஞ் செய்யுங் கொலைபிழைத்து—வல்லிருளிற்
சாரன் மலைநாட தன்னந் தனிவந்து
சேரல் சிறியா டிறத்து.

—கிளவித்தெளிவு.

பகல்வர லென்பது இவ்வகை யிரவுக்குறி வந்தொழுகுந் தலைமகனை யிரவினது ஏதங் காட்டிப் பகல்வாவென்று சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

கழிகட் டலைமலை வோன்புலி யூர்கரு தாதவர்போற்
குழிகட் களிறு வெரீஇ[யரி] யாளி குழீஇவழங்காக்
கழிகட் டிரவின் வரல்கழல் கைதொழு தேயிரந்தேன்
பொழிகட் புயலின் மயிலிற் றுவளு மிவள்பொருட்டே.

—திருக்கோவை - 255.



அடிமே லகலிட மெல்லாம் வணங்க வமரர்தங்கோன்
முடிமேல் வளையுடைத் தானெடு மாறன்முன் னுயர்த்த
கொடிமே லுருமதிர் கூரிருள் வாரன்மி னீர்மகிழும்
படிமே[ம]ற் பகல்வம்மின் வந்தால் விரும்புமென் பல்
[வளையே.

— பாண்டிக்கோவை.

நிரைதா ரன்ன நெடுங்கழை யுகுத்த
விரிகதிர் நித்திலம் விரித்தலி
னிரவும் பகல்போ லிலங்குமா லிவணே.

—பொருளியல்.

இரவு வர லென்பது இவ்வகை யிரவுக்குறி விலக்கிப் பகல்வர வுரைத்த தோழி பகல் வருவானை யிரவு வர லுரைத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

இறவரை யும்பர்க் கடவுட் பரா[ய்]நின் றெழிலியுன்னிக்
குறவரை யார்க்குங் குளிர்வரை நாட கொழும்பவள
நிறவரை மேனியன் சிற்றம் பலநினை யாதவர்போ
லுறவுரை மேகலை யாட்கல ராம்பக லுன்னருளே.

—திருக்கோவை - 260.

அஞ்சா தமர்மலைந் தார்[வ]ள நாட்டட னேயவிய
நஞ்சா ரிலங்கிலை வேல்கொண்ட தென்னவ னுடனைய
பஞ்சார கலல்கு லாட்குப் பகல்நீ வரிற்பழியா
மஞ்சார் சிலம்ப வரவென்ன வூன மயங்கிருளே.

—பாண்டிக்கோவை.

வரிவளைத் தோழி யொருதனி யொழியப்
பிரிது மென்றி யாயிற் பெரிதழிந்
~~தலமரல் வாழி யைய~~
இருளிடை ~~வெய்த~~லு மெய்துமா னமக்கே.

—பொருளியல்.

இரவும் பகலும் வரவொழி யென்பது தலைமகன் வரைவுவிரைதல் காரணமாக இரவின்கண்ணும் பகலின் கண்ணும் வரவொழியெனத் தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

[ரெழும்பிற்
சுழியா வரும்பெரு நீர்சென்னி வைத்தென்னைத் தன்
கழியா வகைவைத்த சிற்றம் பலவன் க[ர]ந்தருமான்
விழியா வருள்புரி மென்குழ லாடிறத் தையமெய்யே
பழியாம் பகல்வரி னீயிர வேதும் பயனில்லையே.

—திருக்கோவை - 261.

ஓதங் கடைந்தமு தாக்கி யமரர்க் குணக்கொடுத்துப்
பூதம் பணிகொண்ட பூழியன் மாறன் பொதியிலின்வா
யேதம் பழியினொ டெய்துத லானிர வும்பகலும்
மாதங் களைந்துமென் னேக்கி திறத்தைய வாரன்மினே.

—பாண்டிக்கோவை.

கறங்கு வெள்ளருவி பிறங்குமலைக் கவாஅற்
றேங்கம ழிணர வேங்கை சூடித்
தொண்டகப் பறைச்சீர்ப் பெண்டிரொடு தொகைஇ
மறுகிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்
தியன்முரு கொப்பின் வ[ய]நாய் பிற்படப்
பகல்வரிற் கவ்வை யஞ்[சு]து மிகல்கொ
ளிரும்பிடி கன்றொடு விரைஇக் க[யவ]ாய்ப்
பெருங்கை யானை கோட்பிழைத் தொரீஇ
யடுபுலி வழங்கு மாரிரு ணடுநாட்
டனியை வருத[லத]னினு மஞ்சுது
மென்னு குவள்கொ ளூனே பன்னாட்
புணர்குறி வாய்த்த புரவுக்குர லேனற்



கிளிகடி பாடலு மொழிந்தனள்
அளிய டானேநின் னளியல திலளே.

—*நெடுந்தொகை - 117.

முருகற் செவ்வியொடு பகல்வரி னவ்வழி
~~யி(உக~~)ரவியற் கவ்வை யஞ்சுது
மிரவரி னதனினும் பெரிதஞ் சுதுமே.

—பொருளியல்.

வார விருபொழுதும் வந்தால் மலைநாட
வேரல் புனைதிருத்தோள் மெல்லியலாள்—சூரல்
வழியிடையூ றஞ்சு மிரவெலா மன்ன
பழியிடையூ றஞ்சும் பகல்.

—கிளவித்தெளிவு.

தன்னுட் கையாறெய்திடு கிளவி யென்பது தலைமகள் தனதாற்றாமையை, 'எம்போல்வா ருளரோ' எனத் திங்கண்மேலும் அன்னத்தின்மேலும் கடலின்மேலும் வைத்துச் சொல்லுதல். அவற்றுள் திங்கண்மேல் வைத்துச் சொல்லுதற்குச் செய்யுள் வருமாறு:—

[சூழ்
விண்டலை யாவர்க்கும் வேந்தர்வண் டில்லைமெல் லங்கழி
கண்டலை யேகரி யாக்கன்னிப் புன்னைக் கலந்தகள்வர்
கண்டிலையேவரக் கங்குலெல் லாமங்குல் வாய்விளக்கும்
மண்டில மேபணி யாய்தமி யேற்கொரு வாசகமே.

—திருக்கோவை - 177.

[அன்னத்தின்மேல் வைத்துச் சொல்லுதற்குச் செய்யுள்:—]

* 'நற்றிணை' யென்பது தொன்னூல்-நிலயப் பிரதி.

மின்கண் படாவடி வேனெடு மாறன்விண் டார்முனைமேல்
மன்கண் படாத மயங்கிரு ளண்மலி நீர்த்துறைவர்க்
கென்கண் படாத நிலைமைசொல் லாயிளஞ் சேவறழீஇத்
தன்கண் படாநின்ற வன்னத்த தேயித் தகவின்மையே.

—பாண்டிக்கோவை.

பறைவா யொலியோதம் பந்த ரு[க]ளுந்
துறைசேர் சிறுகுடியார் துஞ்சினுந் துஞ்சாய்
இறையின் மருண்மாலை யெம்மேபோ னீத்த
துறைவ னுடையையோ நீவாழி நாராய்.

—பழம்பாட்டு.

கடலொடு கவல லென்பது முன்னர்த் திங்கண்மேலு மன்னத்தின்மேலும் வைத்துச் சொல்லினளாய்ப் பின்பு கடன்மேல் வைத்துச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

பூங்கணை வேளைப் பொடியாய் விழவிழித் தோன்புலியூ
ரோங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத்
தீங்கணை[ந்] தோரல்லுந் தேறாய் கலங்கிச் செறிகடலே
யாங்கணைந் தோர்நின் னையுமுள ரோசென் றகன்றவரே.

—திருக்கோவை - 179.

தன்போற் சினத்துரு மேந்திய
கோன்கன்னித் தாதுறையும்
பொன்போன் மலர்புன்னைக் கானலு
நோக்கிப் புலம்புகொண்ட
வென்போ லிரவினெல் லாந்துயி
லாதுநின் றே[ங்]குதியா
லன்போ டொருவற் கறிவழிந்
தாயோ வலைகடலே.

—பாண்டிக்கோவை.



ஆரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்விரி தாழைக் கைதலை
நள்ளென் கங்குலுங் கேட்குநங் குரலே.

—குறுந்தொகை ?

உன்னையு நீத்தகன்றா ருண்டோ வுடல்கருகிப்
புன்னை கமழும் பெ[ா]ருகடலே-யென்னைப்போல்
நெஞ்சா குலம்பெருகி நீயு மிரவெல்லாந்
துஞ்சாத தென்கொலோ சொல்லு.

—கிளவித்தெளிவு.

ஆற்றாமை கூறலென்பது தலைமகள் தனதாற்றாமை தலைமகற்குச் சொல்லி வரைவு கடாதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

வளருங் கறியறி யாமந்தி தின்றுமம் மர்க்கிடமாய்த்
தளருந் தடவரைத் தண்சிலம் பாதன தங்கமெங்கும்
விளரும் விழுமெழும் விம்மும் மெலியும்வெண் மா[மதிநின்
றொளிருஞ் சடைமுடி யோன்புலி யூரன்ன வொண்[ணுதலே.

—திருக்கோவை - 193.

ஐய வாழியோ வைவா யேனப்
புன்றலை மடப்பிடி புலியென [வெ]ரூஉம்
பொன்மருள் வேங்கை யெம்மூர் போல
ஆடவர்ப் பிரிந்தோர்க் கலைக்கும்
வாடையு முளதோநின் பெருங்கன் னாட்டே.

—சிற்றெட்டகம்.

உள்ளத் தவலம் பெருக வொளிவேலோ
யெள்ளத் துணிந்த விருண்மாலை—வெள்ளத்துத்
தண்டா ரகலம் தழூஉப்புணையா நீநல்கி
லுண்டாமென் றேழிக் குயிர்.

—வெண்பாமாலை 12, இருபாற் - 4

பந்தி யிளமிளகு பாராதே தின்றிளைய
மந்தி தளரு மலைநாட—முந்தருவி
சோர வரிநெடுங்கண் சுற்றும் பனிவாடை
யீர மெலிவா ளிவள்.

—கிளவித்தெளிவு.

வரைவது கிளத்த லென்பது இரவுக்குறி வந்தொழுகுந் தலைமகற்குத் தலைமகளுந் தோழியு மாற்றாத் தன்மையராய் வரைவுபயக்கச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:-

பற்றொன் றிலார்பற்றுந் தில்லைப்
பரன்பரங் குன்றினின்ற
புற்றொன் றரவன் புதல்வ
னெனநீ புகுந்துநின்றால்
மற்றுன்று மாமல ரிட்டுன்னை
வாழ்த்திவந் தித்தலன்றி
மற்றொன்று சிந்திப்ப ரேல்வல்ல
ளோமங்கை வாழ்வகையே.

—திருக்கோவை - 178.

நெய்நின்ற வேனெடுமா றனெங்கோனந்த ணேரியென்னு
மைநின்ற குன்றச் சிறுகுடி நீரைய வந்துநின்றாற்
கைநின்று கூப்பி வரையுறை தெய்வமென் றுதுகண்டார்
மெய்நின் றுணர்வ ரெனினுய்யுமோமற்றிவ் வேந்திழையே

—பாண்டிக்கோவை.

கந்த னெனநீ கதிர்வேல் வலனேந்திச்
செந்தினைசூழ் குன்றச் சிறுகுடிவாய்—வந்தருளி
நின்றா லிறவுளர்கள் மெய்யுணரி னேரிழைக்கு
நன்றாத லுண்டோ நவில்.

—பழம்பாட்டு.



குறிப்புரை யென்பது இரவுக்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தா னவதுணர்ந்து [அன்னை] என்னைக் குறித்து நோக்கினளெனப் படைத்துத் தோழி தலைமகட்குச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

விண்ணுஞ் செலவறி யாவெறி யார்கழல் வீழ்சடைத்தீ
வண்ணன் சிவன்றில்லை மல்லெழிற் கான லரையிரவி
லண்ணன் மணிநெடுந் தேர்வந்த துண்டா மெனச்சிறிது
கண்ணுஞ் சிவந்தன்னை யென்னையு நோக்கினள் கார்
[மயிலே.

—திருக்கோவை - 256.

அன்னாய்[நெருநல்] நிகழ்ந்தது
கேளயல் வேந்திறைஞ்சும்
பொன்னார் கழனெடு மாறன்
குமரியம் பூந்துறைவாய்
மின்னார் மணிநெடுந் தேர்கங்குல்
வந்தொன்று மீண்டதுண்டே
லெ(?யெ)ன்னா முகஞ்சிவந் தென்னையு
நோக்கின ளெம்மனையே.

—பாண்டிக்கோவை.

இல்லதுரைத்த லென்பது இவ்வகை வந்தொழுகுந் தலைமகற்குத் தோழி யில்லதுமொழிந்து வரைவுகடாதல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

வான்றோய் பொழிலெழின் மாங்கனி
மந்தியின் வாய்க்கடுவன்
றேன்றோய்த் தருத்தி மகிழ்வகண்
டாடிரு நீண்முடிமேல்
மீன்றோய் புனற்பெண்ணை வைத்துடை
யாளையு மேனிவைத்தான்
வான்றோய் மதிற்றில்லை மாநகர்
போலும் வரிவளையே. —திருக்கோவை - 257.

பண்ணிவர் சொல்லிகண் டாணெ[ன்]னற் பாழிப் பகை [தணித்த
மண்ணிவர் சீர்மன்னன் வாணெடுமாறன் மலையமென்னும்
விண்ணிவர் குன்றத் தருவிசென் ருடியொர் வேங்கை [யின்கீழ்க்
கண்ணிவர் காதற் பிடியொடு நின்ற கருங்களிறே.

—பாண்டிக்கோவை.

கழைகெழு சிலம்பி னருவி (வெ)யாடு
மழைமத களிறொடு பிடிகண்
டுழைகெழு நோக்கி யுள்ளினள் பெரிதே.

—பொருளியல்.

இவையெல்லாம்,

'காம மிக்க கழிபடர் கிளவியுங்
காப்புச் சிறைமிக்க கையறு கிளவியு
மாறுபார்த் துற்ற வச்சக் கிளவியு
[மிரவினும் பகலினு நீவரு கென்றலும்
கிழவோன் றன்னை வார லென்றலும்
தன்னுட் கையா றெய்திடு கிளவியு
மன்ன மரபிற் பிறவுந் தொகைஇத்
தன்னை யழிந்த கிளவி] யெல்லாம்
வரைதல் வேட்கைப் பொருள வென்ப'-இறை-30.

என்னுஞ் சூத்திரத்துட் கண்டுகொள்க

அலரறிவுறுத்த லென்பது தலைமகளது ஆற்றுமை யலராயிற்றெனத் தோழி யுரைத்தல். அதற்குச் செய்யுள் வருமாறு:—

அலரா யிரந்தந்து வந்தித்து மாலா யிரங்கரத்தா
லலரார் கழல்வழி பாடுசெய் தோற்கள வில்லொளிக
ளலரா விருக்கும் படி(?டை) கொடுத் தோன்றில்லை [யானருள்போன்
றலராய் விளைகின்ற தம்பல்கைம் மிக்கைய மெய்யருளே.

—திருக்கோவை - 180.



பலரா வெதிர்நின்று பாழிப்பட் டார்தங்கள் பைம்நிணம்
புலராவசும்புடை வேன்மன்னன்வேம்பொடுபோந்தணிந்த
மலரார் மணிமுடி மான்றேர் வரோதயன் வஞ்சியன்னுட்
கலராய் விளைகின்ற தாலண்ண லார்செய்த வாரருளே.

—பாண்டிக்கோவை.

அறிந்தோ ரறனில ரென்றல் சிறந்த
இன்னுயிர்க் கழியி(?வி)னு நனியின் னுதே
புன்னையங் கானற் புணர்[குறி] வாய்த்த
மி(?பி)ன்னே(?னீ) ரோதியென் றேழிக் கன்றே
படுமணி யானைப் பசும்பூட் சோழர்
கொடிநுடங்கு மறுகி னுர்க்காட் டாங்கட்
கள்ளுடைக் (?)கடவிற் புள்ளொலித் தோவாத்
தேர்வழங்கு தெருவி னன்ன
கவ்வை யாகின்ற தையநின் னருளே.

—நற்றிணை - 227.

நிலவோ ரன்ன வெண்மணற் பாக்கத்து
மலரேர் கூந்தன் மடந்தைக்
கலரா கின்ற தையநின் னருளே.

—பொருளியல்.

அம்பல் பெருகி யலரான தல்லிதொறுந்
தும்பி முரலுஞ் சுரிகூந்தற்—கொம்பனைய
பண்ணரு மென்சொல்லி பால்வந்து பல்காலும்
அண்ணருன் செய்யு மருள்.

—கிளவித்தெளிவு.

அயன்மண முரைத்த லென்பது தலைமகற்குத் தோழி படைத்துமொழிந்து பிறருங் காப்பணியக் கருதுவரென னும். அதற்குச் செய்யுள்:—

மணியக் கணியு மரனஞ்ச மஞ்சி மறுகிவிண்ணோர்
பணியக் கருணை தரும்பரன் றில்லையன் னாடிறத்துத்
துணியக் கருதுவ தின்றே துணிதுறை வாநிறைபொ
னணியக் கருதுகின் றார்பலர் [மேன்]மே லயலவரே.

—திருக்கோவை - 195.

நீரணி வேலி நெடுங்களத் தொன்னார் நிணமளைந்த
போரணி வேன்மன்னன் கன்னியன் னாடனைப்பொன்
[னணிவான்
காரணி வார்முர சார்ப்பப் பிற[ரு]ங் கருதிவந்தார்
வாரணி பூங்கழ லண்ணலென் னானீ வலிக்கின்றதே.

—பாண்டிக்கோவை.

அணிகொணர்ந் தனரே யயலோ ரண்ணல்
துணிவுறு செய்தி யாதுகொல்
மணிபுரை கூந்தன் மடந்தைதன் வயினே.

—போநளியல்.

பொன்னிதழிற் பைந்தாதும் போதும் புறம்புதைத்த
வின்னறல்போ லேழை யிருங்கூந்தல்—பொன்னணியுந்
தேன்சூழுந் தார்க்கண்டன் றெவ்விற் றிகைத்தன்ப
யான்சூழ வுண்டோ வினி.

—கண்டனலங்காரம்.

மணமுரசறைதலென்பதுஇவ்வகைபடைத்துமொழிந்த தோழி நாளை மணமுரசறையுமெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

பாப்பணி வோன்றில்லைப் பல்பூ மருவுசில் லோதியைநற்
காப்பணிந் தார்பொன் னணிவா ரினிக்கமழ் பூந்துறைவ
கோப்பணிவான்றோய் கொடிமுன் றினின்றிவை யோர்கு
மாப்பணி லங்கண் முழங்கத் தழங்கு மணமுரசே. [ழுமி

—திருக்கோவை - 196.



வேலைத் தொலைத்தகணேழை திறத்தின்று விண்ணுரிஞ்சு
சோலைச் சிலம்ப துணியொன்று மின்போற் சுடருமுத்த
மாலைக் குடைமன்னன் வாணெடு மாறன்வண் கூடலின்
[வாய்க்
காலைத் திருமண முற்றத் தியம்புங் கடிமுரசே.

—பாண்டிக்கோவை.

அணிவ ரயலார்பொன் னாங்கதனுக் கீங்குத்
துணிவதனை யின்றே துணிநீ—பணிகொ
ளரவறையு மல்குலாட் கையனே நாளை
முரசறையு நங்கடைவாய் முன்.

—பழம்பாட்டு.

பரிசங் கிளத்த லென்பது இவ்வகை மொழிந்த பாங்கிக்குத் தலைமகன் என் செயற்பாலதென்னும்: அதற்குத் தோழி செல்லுதல். அதற்குச் செய்யுள்:—

எலும்பா லணியிறை யம்பலத் தோனெல்லை செல்குறு
நலம்பா வியமுற்று நல்கினுங் கல்வரை நாடரம்ம [வோர்
சிலம்பா வடிக்கண்ணி சிற்றிடைக் கேநமர் செப்பலொட்
கலம்பா வியமுலை யின்விலை யென்னீ கருதுவதே. [டார்

—திருக்கோவை - 197.

நல்லளந் தானு மழுதளந் தானு(?ளு) நகைக்குநல்ல
வில்லளந் தானு(?ணு)தற் கும்விலை கேட்கில் விரிதமிழின்
சொல்லளந் தானொரு பாவலர்க் காய்த்துறை யூர்நறையூர்
நெல்லளந் தானளந்த[ா]னெடு நாட்டிற்கு நேர்நிற்குமே.

—நறையூரந்தாதி.

என்னா விதுசெய்கென் றென்சொல்ல
லாமிகற் பாழிவென்ற
மின்னா ரயிற்படைச் செங்கோல்
விசாரிதன் வீங்கொலிநீர்த்

தென்னா டெனினுங் கொள்ளார் விலை
யாத்தமர் சீர்செய்வண்டு
முன்னாண் மலரென் றணையுங்க
ணேழை முகிழ்முலைக்கே.

—பாண்டிக்கோவை.

யானென வறிகோ வண்ணல் வானொடு
நானில முழுவதும் பெறினும்
பேணா ரம்ம விவள்பூண் முலைக்கே. —பொருளியல்.

[தாது
பூஞ்சுணங்கின் மென்முலைக்குப் பொன்னுலகோ போ
நாஞ்சில சொல்லி னனியெ[ா]ல்லா(ந்)—தீஞ்சொற்
பிறைநுத லுண்ணாட் டமரோ பெரியார்
குறைவிலர் தாங் கொள்ளார் பிற. —கிளவிமாலை.

கொங்கைக்குந் தூய குலவளைசேர் கோகனகச்
செங்கைக்கு மென்னவிலை செப்புவோம்—மங்கை
தெரியா மருங்குலுக்குத் தேசம்விலை யென்னத்
தரியார் மலைவாணர் தாம். —கிளவித்தெளிவு.

உடன்போக்குரைத் தலென்பது... ...இவ்வகைப் பரிசங் கேட்ட தலைமகன் உடன் [கொண்டு]போவது துணிந்தேனெனினும் நிழலு நீருமில்லாத அழல் வெங் கான[மாற்ற] கில்லாள் கொல்லோ வென்னு(ந் தலை) மக(?த)ற்குத் தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

பிணையுங் கலையும்வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையால்
அணையு முரம்பு நிரம்பிய வத்தமு மையமெய்யே
யிணையு மளவுமில் லாவிறை யோனுறை தில்லைத்தண்பூம்
பணையுந் தடமுமன் றோநின்னொடேகினம் பைந்தொடிக்
[கே.

—திருக்கோவை-202.



[மால்புரை யானை மணிமுடி மாறன்மண் பாய்நிழற்றும்
பால்புரைவெண்குடைத் தென்னன் பறந்தலைக்கோடி]
[வென்ற
வேல்புரை வெம்மைய கான மெனினுமவ் வேந்தன் செய்ய
கோல்புரை தண்மைய வாநின்னொ டேகினக் கொம்பி
[னுக்கே.

—பாண்டிக்கோவை.

தீயினும் [வெம்மைய] வென்குவை யாயின்
யாவது மினிய கானஞ்
சேயுயர் சிலம்ப நின்னொடு செலினே.

—பொருளியல்.

மன்னெடு வேலினாய் மாழை மடநோக்கி
நின்னொடு செல்ல நெடுங்கானங்—கொன்னுனைய
வேலன்ன வெம்மைய வாயினும் வேந்தர்செங்
கோலென்ன லாகுங் குளிர்ந்து. —கிளவிமாலை.

தீய பெருவனமுஞ் செந்தறையு நந்தறையுந்
தூய பெருவனமுஞ் சோலையுமா—மாய
கலம்பா முலைமகட்குக் காமருபூங் கண்ணிச்
சிலம்பாநின் பின்னர்ச் செலின்.

—கிளவித்தெளிவு.

செலவுடன் படுத்தலென்பது இவ்வகை யுடன்போக்கு நயப்பித்த தோழி தலைமகளுழைச் சென்றுணர்த்த(லை)த் தலைமகள் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

மற்பாய் விடையோன் மகிழ்புலி யூரென் னொடும்வளர்ந்த
பொற்பார் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்துநுந்தக்
கற்பார் நெடுங்கால் கலக்கிப் பறித்தெறி யக்கழிக
இற்பாற் பிறவற்க வேழையர் வாழி யெழுமையுமே.

—திருக்கோவை-208.

எனு மிகலு மழிந்துதெவ் வேந்தரெல் லாமிறைஞ்சிக்
காணுங் கழனெடு மாறனெங் கோனின்று காக்குமண்
சேணுமென் னேடகலா துடனுய்த்திரி வின்றிவந்த[மேற்
நாணு மளி[ய]த் த[கு]கற்பு மேற்பட நைகின்றதே.

—பாண்டிக்கோவை.

அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கொம்பி னேங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீந்துக் காங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே.

—குறுந்தொகை-149.

சிலரும் பலருங் கட்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டி ரம்ப றூற்றச்
சிறுகோல் வலத்த ளன்னை யலைப்ப
வலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநா று குரூஉச்சுவற்
கடுமான் (?)பரியகழ் கதழ்பரி கடைஇ
நடுநாள் வரூஉ மியறேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினல் யானே
அலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே.

—நற்றிணை-149.

ஊருஞ் சேரியு மலரெழ யாயுந்
தானே யிருக்க நன்மனை யானே
திருந்துவேல் விடலையொடு [செ]கழீஇ
யருஞ்சுரஞ் சேறல் புரிந்தன[னி]னியே.  (ப.35)

—பொருளியல்.



செலவழுங்குவித்த லென்பது இவ்வகை யுடன்செல வுற்ற நிலைமைகண்ட(?டு) செவிலித்தாய் முதலாயினர்க்கு உரைத்ததற்பின் இவர் நீரிலாரிடைப் போய் வருந்துங் குறையென்னெனத் தோழி தலைமகற்குச் சொல்லுதல்.

அதற்குச் செய்யுள் :—

பாயப் புரவி கடாயன்று பாழிப் பகைமலைந்தார் [லின்வாய்
தேயச் சிலைகொண்ட தென்னவன் றன்றென் பொதியி
வேயொத்த தோளிணை நும்மொடு[சேறல்]விருப்புறுந்தன்
ஆயத் தவரை நினைந்துண்க ணீர்கொண் டலம்வந்தவே.

—பாண்டிக்கோவை.

விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசி(லம்)[ப்]
பாசந் தின்ற தேய்கான் மத்தம்
நெய்தே ரியக்கம் வெளின்முதன் முழங்கும்
வைகுபுலர் விடியன் மெய்கரந்[து] (செ)தன்கா
லரியமை சிலம்பு கழீஇ நன்மாண்
வரிப்புனை பந்தொடு வைஇய செல்வோள்
இவைகாண் டோறு நோவ[ர்] மாதோ
அளியரோ வளியரென் னுயத் தோரென
நும்மொடு வரவியா னயரவும்
என்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே.

—நற்றிணை-12.

எழினுத னும்முட னேகுதல் விரும்பு
மழிவுறு மாயத் தவர்களை நினைந்து
(?)விழையினை யெண்ணந் தான்மிகத் தருமே.

—பழம்பாட்டு.

இவையெல்லாம்
'அம்பலு மலருங் [களவு]'—இறை - 22.
[என்னுஞ் சூத்திரத்துட்] கண்டு கொள்க. தோழியா
(நக - சஉ)
லாய கூட்டமுடிந்தது.

களவொழுக்க முடிந்தது.

## கற்பொழுக்கம்.

43. * * *

வெளிப்ப[ை]ட முதலா விதும்ப [லீறக்]
களிப்பென வுரைப்பது கற்பெனப்படுமே

என்பது என்னுதலிற்றோவெனின் அறத்தொடுநிலை முதலாகப் புணர்ச்சிவிதும்ப லீருகக் கற்பெனப் படுமென்றவாறு.

முக்கட் கூட்ட முதலா நான்குந்
தொக்கிய லொழுக்கங் கற்பெனத் தோன்றும்

என்பது அறத்தொடு நிலையும், உடன் செலவும், இடைப் பிரிவும், ஆயிடைப்பிரிவும் என வகைப்பட்ட நான்குந் தொக்க வொழுக்கம் முக்கட்கூட்ட முடைய கற்பென்று சிறப்பிக்கப்படுமென்று(?ற) பொருளியலுடையாரும் அறத் தொடுநிலை கற்புக்கு முதலென்று சொன்னரென்க. (சங.)

[பொருட்கேதுத
44. அடைவாம் வெளிப்படை யாங்கே வரையும்
லுடையாதுடனிலைச் செல்லுதல் கல்விப்பிரிவுணர்த்தல்
படையார் விழிக்கண காவலிற் போதும் படியுணர்த்தல்
நடையார் பகைதணித் த[ல்ல]றக் கற்பி னவிற்றுவதே.

45. நவில்தரும் வேந்தநக் குற்றுழிப் போதல் நலம்பயின்ற
புவிமிசை நாமப் பொருள்வயிற் போதல் புடைவளரும்
துவிழலை யாயப் பரத்தையிற் போத லெனநாற்தலக்
கவிஞர்கள் தாமோன் பதுவகை யாமெழிற்கற்பென்பரே.

இச்சூத்திர மிரண்டு மென்னுதலிற்றோவெனின், கற் பொழுக்கம் ஒன்பது வகைப்படுமென்பது அறிவித்தலைக் கருதிற்று.

என்னை ? வெளிப்படை நிலையும், வரைபொருட்கேகலும், உடனிலைச் செலவும், கல்விப் பிரிவுணர்த்தலும்,



காவலிற் பிரிவுணர்த்தலும், பகைதணி வினைப்பிரி வுணர்த்தலும், வேந்தர்க்குற்றுழிப் பிரிவுணர்த்தலும், பொருள் வயிற்பிரிதலும், பரத்தையிற் பிரிதலும் என வொன்பது வகைப்பட்டவாறு கண்டு கொள்க. ... (சச-சரு.)

என்று சொல்லப்பட்ட கற்பொழுக்க மொன்பதுவகையினுள்ளும் வெளிப்படைநிலை பத்தொன்பது வகைப் பட்ட கிளவியாம். அவை வருமாறு:—

46. கற்பமர் பூத்தான் றநம[ப்] புணர்ச்சியுங் காதலித்துப்
பொற்பமர் தண்புனல் தான்றந நீதிப்புணர்ச்சியும்போ
ரற்புத மாநங் களிறு தநம[ப்] புணர்ச்சியுமாங்
கிற்பயில் கட்டுவிக்கேட்ட லெழிற்கட் டுவிகூறலே.

47. கூறப் படும்வெறி தானங் கெடுத்தல்கூ றும்மவ்வெ
கீறற் றழித லறிவுறக் கூற லெழிற்றலைவி [றிக்
வேறற்றவளுக் கறத்தொடு நிற்றல் [வெறிவிலக்கல்]

... ... ...
48. ... ... ...
... ... வேறலைப்
படிவார் வ[ை]ரவை மறுத்தல் பரிச மொடுவருதல்
வடிவார் வரைவு மலிதல் வரைவை யுடன்படலே.

49. வரைவார் முரசுக் கிரங்கல் மணமுர சும்விருவேன்
றுரையார் கிளவிக ளீரஞ்சோ டொன்பது மோங்குந்திரைக்
கரையார் கருங்கடல் சூழுல கத்திற் கலைத்தமிழோர்
விரையார் குழலாய் வெளிப்படை யென்று விளம்பினரே.

இச்சூத்திரம் நான்கும் என்னுதலிற்றோவெனின், முன் சொன்ன வெளிப்படை நிலை பத்தொன்பது வகைப் பட்ட கிளவியாமென்றார்: அவை யறிவித்தலைக் கருதிற்று.

என்னை ? பூத்தரு புணர்ச்சியும், புனறரு புணர்ச்சியும், களிறுதரு புணர்ச்சியும், கட்டுவிக்கேட்டலும், கட்டுவி

கூறலும், வெறியெடுத்தலும், வெறியினுக் கழிதலும், அறிவுறக் கிளத்தலும், தலைமக டோழிக் கறத்தொடு நிற்றலும், வெறிவிலக்கலும், முருகற்குரைத்தலும், செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்றலும், நற்றாய் தன் ஐயன்மார்க் கறத்தொடு நிற்றலும், வரைவு மறுத்தலும், பரிசமொடு வருதலும், வரைவுமலி வுரைத்தலும், வரைவுடன் படுத்தலும், முரசினுக் கிரங்கலும், முரசு வினுதலும் எனப் படுமென்றவாறு.

வெளிப்படைநிலை யெனினும் [அறத்தொடுநிலையெனினும்] அமையும்.

அவற்றுள், பூத்தரு புணர்ச்சி யென்பது என்மகட்கு இவ்வேறுபாடு எற்றினு னயிற்று என்ற செவிலிக்கு அறத்தொடு சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

ஆளரிக் கும்மரி தாய்த்தில்லை யாவருக் கும்மெளிதாந்
தாளரிக் குன்றிற்றன் பாவைக்கு மேவித் தழறிகழ்வேற்
கோளரிக் குந்நிக ரன்னு ரொருவர் குருமலர்த்தார்
[தலே.
வாளரிக் கண்ணிகொண் டாள்வண்ட லாயத்தெம் வானு

—திருக்கோவை-225.

கந்தார் களிறு கடாய்ச்செந் நிலத்தைக் கறுத்தெதிராய்
வந்தா ரவியவை வேல்கொண்ட கோன்கொல்லி வார்
[துறைவாய்ப்
பந்தார் விரலிதன் பாவைக்கு வேண்டப்பைம் போ
[தொருவர்
தந்தார் தரவவை கொண்டணிந் தாளித் தடங்கண்ணியே.

—பாண்டிக்கோவை.



உள்ளஞ்செய் பாவைக்குன் கைப்போ தருளென்னக்
கொள்ளென் றொருவன் கொடுத்ததற்பின்——கள்ளுண்டு
வண்டினந்தாழ் கின்ற மலர்க்குவளைப் போதிரண்டு
கொண்டணிந்தா ணீபயந்த கொம்பு.

—பழம்பாட்டு.

புனறரு புணர்ச்சி யென்பது நின்மகள் சுனையாடப் புகுந்தவிடத்து அழுந்துபடக்கண்டு ஒருதோன்றல் கரை யேற்றினனெனச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

ஓங்கிய வெண்குடைப் பைங்கழற்செங்கோ லுசிதன்வை
வீங்கிய தண்புன லாடி விளையாட் டயர்பொழுதிற் [கை
றேங்கிய தெண்டிரை வாங்க வொழுகிநின் சேயிழையா
ணீங்கிய போதருள் செய்தனன் வந்தோர் நெடுந்தகையே

—பாண்டிக்கோவை.

காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவா
டாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலா
னீணாக நறும்பைந்தார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாக முறத்தழீஇப் போ[த்] தந்தா னகனகலம்
வருமுலை புணர்[ந்தன வென்பதனா லென்றோழி
யருமழை தரல்வேண்டிற் றருகிற்கும் பெருமையளே]

—கலித்தொகை-39.

*

* *

[கட்டுவி கூறல்...]

எய்யா வுள்ளமொ டி[னை]யல் வாழியெம்
மைதபு கழங்கிற் பட்டது முளதே
மையில் காட்சியின்/மயங்கி/
[னை]யதை னுரு...வாகுத றெளிவே.

—பொருளியல்.

* 'ஈண்டு 79,80 என்ற இரண்டு எண்ணுக்குரிய ஏடு வீடுற்றது: ஆதலின் விஷயத்தொடர்பின்று' என்பது தொன்னூல்-நிலைப் பிரதி.

வெறியெடுத்த லென்பது கட்டுவிக் கேட்ட செவிலித் தாய் வெறியெடுப்பித்தல். அதற்குச் செய்யுள்:—

வேலன் புகுந்து வெறியா டுகவெண் மறியறுக்க
காலன் புகுந்தவி யக்கழல் வைத்தெழிற் றில்லைநின்ற
மேலன் புகுந்தென்க ணின்றா னிருந்தவெண் காடனைய
பாலன் புகுந்திப் பரிசினி னிற்பித்த பண்பினுக்கே.

—திருக்கோவை-286.

வெறியா டுகதிறல் வேலன் புகுந்து வியந்துவெள்ளை
மறி[யே] யறுக்க மலர்ப்ப[லி தூவுக] வண்டமிழ் நூல்
[குறி]வா னிகந்தசெங் கோலரி [கேசரி] கூடலன்ன
சிறியா ளிவடன்னை யிப்படி யாக்கிய தீங்கினுக்கே.

—பாண்டிக்கோவை.

[மறியறு]த்த செங்குருதி தன்னால் மனைமுன்
வெறியெடுக்க வெண்பலி தூஉய் வேலன்—வெறியறுத்த
மான்கொண்ட கண்ணி மதிகொண்ட வா[ணுதலா]
டான்கொண்ட விந்நோய் தனக்கு. —பழம்பாட்டு.

வெறியினுக்கழிதலென்பது செவிலித்தாய் வெறியெடுப் பக் கண்டு ஆற்... தலைமகள் சொல்லுதல்.

அதற்குச் செய்யுள்:—

அயர்ந்தும் வெறிமறி யாவி செகுத்தும் விளர்ப்பயலார்
பெயர்ந்து மொழியா விடினென்னை பேசுவ பேர்ந்திருவ
ருயர்ந்தும்பணிந்து முணரா[ன]தம்பல முன்னலரிற்[கே.
றயர்ந்தும் பிறிதி னொழியினென் னா[துந் துறைவனுக்

—திருக்கோவை-287.

வீயா மரபின் [illegible]
ஆவயி னறைப்பி னெவ்வநோ [illegible] தோழி
நாமுற்ற நீர் ... போல
காமவெந்நோய் [illegible] கந்தன்றே.

—பொருளியல்.



தலைமகள் அறத்தொடுநிற்றலென்பது யாய்க் கறிவிக்க வேண்டுந் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நிற்றல்.

வண்டலுற்றேமெங்கண்வந்தொரு தோன்றல்வரிவளையீ
ருண்டலுற் றேமென்று நின்றதொர் போதுடை யான் [புலியூர்க்
கொண்டலுற் றேறுங் கடல்வர வெம்முயிர் கொண்டுதந்து
கண்டலுற் றேநின்ற சேரிச்சென் றானோர் கழலவனே.

—திருக்கோவை-290.

சிற்றிலின் வந்தொரு தோன்றல் சிறுசோ றிடுமெனநின்
றுற்றுரை யாடு மளவி லுசித னுலகளந்த
கொற்றவன் மாறன் முசிறியைச் சூழ்ந்த குணகடல்வந்
தெற்றுநல் வாயெம் முயிரளித் தேகின னேந்திழையே.

—பாண்டிக்கோவை.

தோழி வாழி மேனு ளொருவ
னாழ்கய மருங்கி னழுந்தத்
தாழ்பெருந் தடக்கையின் வாங்கினன் றகைத்தே.

—பொருளியல்.

வெறிவிலக் கென்பது இவ்வகைச் சொல்லக்கேட்ட தோழி வெறிவிலக்குதல். அதற்குச் செய்யுள்:—

விதியுடை யாருண்க வேரி விலக்கல மம்பலத்துப்
பதியுடை யான்பரங் குன்றினிற் பாய்புனல் யாமொழுகக்
கதியுடை யான்கதிர்த் தோணிற்க வேறு கருதினின்னின்
மதியுடை யார்தெய்வ மேயில்லை வேறினி வையகத்தே.

—திருக்கோவை-292.

சேர்ந்தசங் கத்த சிறுநுதற் காகச்செவ் வேன்முருகற்
கீர்ந்தசங் கத்தையிட் டாலென் பயன்கட் டிலங்கைச் [செந்தீக்
கூர்ந்[தசங்க]த்துவிற் கோலிய கொற்றவன் வெற்றிச் [செங்கை
யார்ந்தசங் கத்தரங் கன்றிருத் தார்கொண் டணிமின்களே.

—கோயிலந்தாதி.

வண்டா ரிரும்பொழில் வல்லத்துத் தென்னற்கு மாறெதிர்
விண்டா ருடலின் மறியறுத் துண்டி வெறியயர்ந்து [ந்து
தண்டார் முருகற் றருகின்ற வேலநற் றண்சிலம்ப
ஞெண்டா ரகலமு முண்ணுங் கொலோநின் னுறுபலியே.

—பாண்டிக்கோவை.

தண்ணென் சாய லிவ்ளோய் தணிய
வெண்ணின ராயின் மன்னே
வண்ண லாகமு முண்ணுமோ பலியே.

—பொருளியல்.

நீலக் கருந்தடங்கண் ணித்தில வெண்ணகைக்குக்
கோலத் தளிர்வண்ணங் கூட்டுமே—வேல
வெறியாருந் தார்க்கண்டன் மேவாரில் வாட
மறியாடு கொல்லும் வழக்கு.—சண்டனலங்காரம்.

கோல மறியின் குருதியாற் கொய்ம்மலரால்
வேல னயரும் வெறியாட்டுச்—சால
மடவார் மயின்முருக னன்றியே யண்ணல்
தடமார்பு முண்ணுமோ தான். —களவித்தெளிவு.

முருகற்குரைத்த லென்பது இவ்வகைப்பட்ட வெறியை விலக்கிவைத்து முருகற் குரைப்பாளாய் அயலார் கேட்பச் சொல்லுதல். அதற்குச்செய்யுள் :—

பொன்னணங் கீர்ம்புனற் பூலந்தை
யொன்னார் புலாலளைந்த
மின்னணங் கூ(?கி)ரிலை வேல்மன்னர்
கோன்விய னாட்டவர்முன்
றன்னணங் கன்மை யறிந்தும்
வெறியின்கட் டாழ்ந்தமையால்
மன்னணங் காயினு ம[ாகவி]ச்
செவ்வேள் மடவியனே. —பாண்டிக்கோவை.



கடவுட் கற்சுனை யடையிழந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தட்
குருதி யொண்பூ வுருகெழக் கட்டிப்
பெருவரை யடுக்கம் பொற்பச் சூர்மகள்
அருவி யின்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி யருநோய்
நின்னணங் கன்மை யறிந்து மண்ணா(ந்)து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறியிடை வந்தோய்
கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே. —நற்றிணை-34.

பேதை வாழிய முருகே யாவது
மேதில னென்பதை யுணர்ந்து
வாராநோய் தணிய வருத லானே. —பொருளியல்.

செவிலி யறத்தொடுநிற்றலென்பது தோழி யறத்தொடு நிற்றல்கேட்ட செவிலி நற்றாய்க்குக் கூறுதல். அதற்குச் செய்யுள்:—

இளையா ளிவளையென் சொல்லிப் பரவுது மீரெயிற [யோர்
முளையாவளவின் முதுக்குறைந் தாண்முடி சாய்த்திமை
வளையா வழுத்தா வருதிருச் சிற்றம் பலத்துமன்னன்
றிளையா வருமரு விக்கயி லைப்பயில் செல்வியையே.

—திருக்கோவை-294.

முருந்தார் கலிதரு முத்தங் கடுக்கு முறுவலிரண்
டரும்பா வளவி லறிவையுண் டாயின ளாங்கரச
ரொருங்கா ரணியம் புகச்செற்ற தென்ன னுசிதனெங்
[கோன்
கரும்பார் கழனிகள் சூழ்கன்னி நாடன்ன காரிகையே.

—பாண்டிக்கோவை.

முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலைய னொள்வேற் கண்ணி
முலையின[ம்] வாரா முதுக்குறைந் தனளே.

—சிற்றெட்டகம்.

முளையெயிறு நிரம்பா விளமைப் பருவத்
தளிய ளொருவன் றளையவிழ் கண்ணி
முலையும் வாராள் முதுக்குறைந் தனளே.

—பொருளியல்.

தன்னெயிறு தோன்றா தனமு மடிவரையா
நன்னுதலி ... ... மறையாத—மின்னனைய
அல்லாங் குழலா [ள]றிவுடைமைக் கன்னைநா
மெல்லாந் தொழவேண்டு மின்று.

—கிளவித்தெளிவு.

நற்றாய்[தன்னையன்மார்]க் கறத்தொடு நிற்றலென்பது செவி[லி] யறத்தொடு [நிற்ப] நற்றாய் தந்தை முதலாயினார்க்குக் கூறுதல். அதற்குச் செய்யுள்:—

சான்றோர் வரவும் விடுத்தவர் தந்தக வுந்நமது [திற்
வான்றாய் குடிமையு நோக்கினல் லாற்பொரு ளேகரு
றேன்றாய் கமழ்கண்ணிச் செம்பியன் மாறன்செங் [கோன்மணந்த
மீன்றாய் கடலிடந் தானும் விலையன்ற மெல்லியற்கே.

—பாண்டிக்கோவை.

சான்றோர் வருந்திய வருத்தமு நமது
வான்றாய் வன்ன குடிமையு நோக்கித்
திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள்
வருமுலை யாகம் வழங்கி [னோ ந]ன்றே



யஃதான்று, அடைபொருள் கருதுவி ராயிற் குடையொடு
கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவி னுறந்தை [யொ]
டுள்ளி விழவின் வஞ்சியுஞ் சிறிதே.

—நற்றிணை?

கலந்தாங் கிளமுலைக் கற்புடை மடந்தையைக்
குலஞ்சா லொழுக்க நோக்கி
நலஞ்சா லண்ணற்கு நேர்வது நடையே.

—பொருளியல்.

*    *    *

... ... ஞ் சொன்னபடி
தந்தார் நமருந் தரவிசைந்தார்—ந[ந்]தாத
பண்ணீர் மொழிமடவாய் பார்வருந்த வார்முலைமேற்
கண்ணீர் சொரிய[ல்] கலுழ்.

—கிளவித்தெளிவு.

வரைவுடன்படுத்த லென்பது தலைமகனது மேம்பாடுந் தலைமகளது சிறப்புடைமையுந் தோழியுணர்த்தல். அதற்குச் செய்யுள்:—

குறைவிற்குங் கல்விக்குஞ் செல்விற்கு[நின்]குலத்திற்கும் [வந்தோர்
நிறைவிற்கு மேதகு நீதிக்கு மேற்பினல் லாணியைனயி
லிறைவிற்குலாவரை யேந்திவண் டில்லையி னேழ்பொழிலு
முறைவிற்குலா நுதலாள் விலையோமெய்ம்மையோ தினர்க்

—திருக்கோவை-266. [கே.

விரவும் பெருமைக் குலனுந் தகவுமிக் கீர் நமது
வரவு கருதித் தருதுமன் றாய்விடின் மண்வணங்கிப்
பரவுங் கழனெடு மாறன் பகைநறை யாற்றுவென்றான்
உரவுங்கடல்வையந் தானும்விலையன்றொண் ணுதற்கே

—பாண்டிக்கோவை.

---

* ‘ 83-ம் ஏடு இன்று’ என்பது தொன்னூல் - நிலயப் பிரதி.

வான்றோய் தொல்குடி மரபு மிவ்வழிச்
சான்றோர் தமது வரவு நோக்கி
நேர்ந்தன மல்லதிவ் வுலக
மூன்றுடன் பெறினும் முடிவதோ வன்றே.

—பொருளியல்.

தூய நினதறிவுங் கல்வியுந் தொன்முனிவ
ராய வவர்வரவு மன்றாயின்—மேயசீ
ரோலா[ர்பூ] வட்ட முறையிடவும் போதாது
வேலா முலைக்கு விலை. —கிளவித்தெளிவு.

முரசினுக் கிரங்க லெனபது இவ்வகைச் சொல்லக் கேட்ட தலைமகன் வினைமுற்றி நிதி[யொடு] நீண[க]ர் புகுந்த பின்னர் முரசறைதல் கேட்ட தலைமகள் சொல்லுதல். அதற்குச் செய்யுள் :—

அடற்களியாவர்க்கு மன்பர்க் களிப்பவ[ன் றன்பவின்பம்
படக்]களியாவண்டறைபொழிற்றில்லைப் பரமன்வெற்பிற்
கடக்களி யானை கடந்தவர்க் கோவன்றி நின்றவர்க்கோ
விடக்களி யாநம் விழுநக ரார்க்கும் வியன்முரசே.

—திருக்கோவை-297.

செம்மையில் லாததெவ்வேந்தரைச் சே(வ்)வூர்ச் செருக்
வம்மிகு தானை யடலரி கேசரியம்பொதியில் [கழித்த
வெம்முக யானை கடிந்தவர்க் கோவன்றி வேறெவர்க்கோ
நம்மனை வாசலில் நம்முர சந்தா னரலுவதே.

—பாண்டிக்கோவை.

முன்னாள் யானை நம்மைமுனி வழித்த
அன்னார் தமக்கோ [பிறர்க்கோ]
இந்நா ணங்கடை யிரங்கிய முரசே. பழம்பாட்டு.

முரசுவினாதல் லென்பது இவ்வகைச் சொல்லக் கேட்ட தோழி தந்தை முதலாயினர் கேட்கச் சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—



அந்தணர்க் காகி யகத்தியன் றானுரை செய்தமும்மைச்
செந்தமிழ்க் காவலன் றென்னம் பொருப்பிற் செழும் [பொழில்சூழ்
பைந்தடத் தாழ்கயந் தாழ்வது கண்டிப் பணிமொழியை
வந்தெடுத் தார்க்கன்றி யாவருக் காமிம் மணமுரசே.

—பாண்டிக்கோவை.

செருமலை தானவர் முப்புரந் தீயெழத் தேவர்கட்கும்
வருமலை தீர்த்தவன் மாமழ பாடியில் வந்தெதிர்ந்த
கருமலை வீட்டிய செம்மலை யன்றிக் கறங்குவதிம்
மருமலை கூந்தலை யார்கொள்ள வேண்டி மணமுரசே.

—மழவையெழுபது.

தேனை யனைய மொழியாண்மேற் சென்றெதிர்ந்த
யானைகடிந் தார்க்கோ வவர்க்கன்றி—யேனை[யரா]
[வின்]றி(ய)ங்கு நின்றவர்க்கோ யாவர்க்கோ வெ
முன்றின்க ணார்க்கு முரசு. [ன்றி—

—பழம்பாட்டு.

இவை யெல்லாம்
[வெளிப்படை தானே விரிக்குங் காலைத்]
தந்தை தாயே தன்னைய ரென்றாங்
கன்னவ ரறியப் பண்பா கும்மே' —இறை - 26.
என்னுமிலக்கணத்துட் கண்டுகொள்க. (சகூ-சக.)

வெளிப்படை நிலை முடிந்தது.

50 விளம்பு மியல்பைப் பழித்த லியற்பட வேவிளப்ப
லுளங்கோள் தணப்பிடர் தன்னைமொழித்த லென்வுரை [க்கும்
வளங்கோள் கிளவிகள் மூன்றும் வரைபொருட் கேக [லென்க்
குளங்கொண்ட நன்மொழிக் கொம்பே தமிழினுட் கோப் [புற்றதே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், வரைபொருட் ககறல் மூன்று வகைப்பட்ட கிளவியா மென்பதறிவித்தலைக் கருதிற்று. என்னை? இயற்பழித்தல், இயற்பட மொழிதல், தணப்பிட ரொழித்தல் என. அவற்றுள் இயற்பழித்த லென்பது இவ்வகை வெளிப்பட்டபின்றையும் வரையாது நெட்டிடை கழிந்து பொருள்வயிற் பிரிந்த விடத்து ஆற்றாளாய தலைமகளைக் கண்ட தோழி சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

பொன்னு மணியும் பவழமும் போன்று பொலிந்திலங்கி
மின்னுஞ் சடையோன் புலியூர் விரவா தவரினுண்ணோ
யின்னு மறிகில வாலென்னை பாவ மிருங்கழிவாய்
மன்னும் பகலே மகிழ்ந்திரை தேரும்வண் டானங்களே.

—திருக்கோவை-189.

இகலே புரிந்தெதிர் நின்றதெவ் வேந்த ரிருஞ்சிறைவான்
புகலே புரியவென் றூன்கன்னி யன்னாள் புலம்புறுநோய்
மிகலே புரிகின் றதுகண்டு மின்றிவ் வியன்கழிவாய்ப்
பகலே புரிந்திரை தேர்கின்ற நாரைப் பிறவைகளே.

—பாண்டிக்கோவை.

வானது நாணக் கொடையா லுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழுஞ் செழும்பொழில் சூழந்து பாரனையா
டானணி வாணுதல் கண்டும் பகலே தனித்தனியே
மானமி லாதிரை தேரும் பறவைக டாம(ழுக)ழிந்தே.

—பல்சந்தமாலை.

இயற்பட மொழித லென்பது இவ்வகை சொல்லி யியற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிதல். அதற்குச் செய்யுள்:—



மின்றூ னனைய விளங்கொளி வேலொடு வெண்டிரைமே
னின்றா னிலமன்ன னேரியன் மாற னிகன்முனைபோற்
கொன்றூறலைக்குஞ் சுரமவர் நீங்கவென் கோல்வளைகள்
சென்றூ லதுபிறி தாகவிவ் வூர்வரச் சிந்திப்பரே.

—பாண்டிக்கோவை.

தொல்கவின் றொலைந்து தொன்னலஞ் சாஅய்
நல்கார் நீத்தன ராயினு நல்குவர்
நட்டனர் வாழி தோழி குட்டுவன்
அகப்பா வழிய நூறி யரும்பினை(?மிளை)ப்
பகற்றீ வேட்ட ஞாட்பினு மிகப்பெரி
தலரெழச் சென்றன ராயினு மலர்கவிந்து
மாண(?மாமட) லவிழ்ந்த காந்தளஞ் சோலை
யினஞ்செல் வயக்களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத் தஞ்சுபிடிப் பூசல்
நெடுவரை விடரகத் தியம்புங்
கடுமான் புல்லிய(ங்) காடிறந் தோரே.

—நற்றிணை-14.

வஞ்சி யிடைமடவாய் வல்வினையே னுண்கண்ணூ
நெஞ்சு மகலாது நிற்றலாற்—செஞ்சுரும்பு
பண்ணளிக்குந் தண்டார்ப் பருவரைசூழ் நன்னாடன்
றண்ணளிக்கு முண்டோ தவறு. கிளவித்தெளிவு.

தணப்பிட ரொழித்த லென்பது ஒருவழித்தணத்தற்கு ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி யாற்றுவித்தல். அதற்குச் செய்யுள்:—

கானமர் குன்றர் செவியுற வாங்கு கணை துணையா
மானமர் நோக்கியர் நோக்கென மானற்றொடைமடக்கும்
வானமர் [வெற்பர்]வண் டில்லையின் மன்னை வணங்கலர் [போற்
றேனமர் சொல்லிசெல் லார்செல்லல் செல்ல திருநுதலே.

—திருக்கோவை-274.

அடுமலை போற்களி யானை யரிகேசரியுலகின் [மகிழ்ந்து
வடுமலை யாதசெங் கோன்மன்னன் வஞ்சியன் னாய்
படுமலை போல்வண்டு பாடுசெங் காந்தட்பைந்தேன்பருகு
நெடுமலை நாடனை நீங்கு[ெ]மன்றோ [நீ] நினைக்கின்றதே.
—பாண்டிக்கோவை.

குழலிசை[ய] வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட்
குலைமேற் பாய
அழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென்
நயல்வாழ் மந்தி
கழல்(?லுழ்)வனபோ னெஞ்சகைந்து கல்லருவி தாவு
நிழல்வரை நன்னாட னீப்பனோ வல்லன்.
—பழம்பாட்டு.

இவையெல்லாம்

‘பட்ட பின்றை வரையாது கிழவோ
னெட்டிடைக் கழிந்து பொருள்வயிற் பிரிதலும்
பொருள்வயிற் பிரியா தொ[ருவ]ழித் தணத்தலும்
புரைவ தென்ப கற்பா லான’ —இறை - 25.

என்னுஞ் சூத்திரத்துட் கண்டுகொள்க. (௫௰)

வரைபொருட் கேகல் முடிந்தது.

51. உற்ற நெறிகை யடைசுரத் துய்த்தல் சுரத்துழை
பற்றி விருந்து விலக்கல் பதியி னளவுரைத்தல் [யோர்
சிற்றிடைத் தோழிதன் னைவினா விச்செவி லியிரங்க [பே.
னற்றாய வேயனை யாண்மென்மை கூறனற் றாய்க்குரைப்

52. நற்றா யிரங்கனற் செஞ்சுடர் தன்னைப் பரவன்ணணிப்
பெற்றாள் கருமா மகளுக் குரைத்தல்பின் சேறல்சுரத்
துற்றா விரங்கல் புறவோ டுரைத்த லடிச்சுவட்டைச்
சுற்றா வுரைத்தல் சுரத்து வினாதல் துடிபிடையே.



53. துடியா ரிடையாட்கை யங்கிளத் தல்சேர் விடஞ்
[சொல்லுதல்
தொடியார் செவிலியை யாற்றல் துடரகந் தானணித்தல்
வடியார் வரவது முந்துறுப் [ே]பய்ந்த கிளைமகிழ்ச்சி
யடியான வேலன் றனைவினா வீன்றாட் புகழ்வதுவே.

54. வேட்டான் மணங்கண் டுரைத்தலக் கற்பு நிலைவிளம்
வாட்டாழ் விழிதன் மகணிலை கூற லெனவகுத்த [பல்
பாட்டார் கிளவி ... ...
... ... ...
[உடனிலைச் செலவு... ...]

கிளவியாமென்ப தறிவித்தலைக் கருதிற்று. என்னை? கையடையும், சுரத்துய்த்தலும், விருந்து விலக்கலும், பதியள வுரைத்தலும், தோழியை வினாதலும், செவிலி யிரங்கலும், மென்மை கூறலும், [நற்றாய்க் குரைத்தலும்,] நற்றாயிரங்கலும், செஞ்சுடர்ப் பரவலும், கருமகட்குரைத்தலும், பின்செல வலித்தலும், சுரத்திரங்கலும், புறவொடுரைத்தலும், அடிச்சுவடுரைத்தலும், சுரத்திறம் வினாதலும், ஐயமுரைத்தலும், சேர்விடமுரைத்தலும், செவிலியை யாற்றலும், துடரகந்தணித்தலும், வரவுமுந்துறுத்தலும், கிளையது மகிழ்ச்சியும், வேலனை வினாதலும், ஈன்றாட் புகழ்தலும், மணங்கண்டுரைத்தலும், கற்புநிலை விளம்பலும், மகணிலைகூறலும் என. அவற்றுட் கையடை யென்பது உடன்போக விரைந்தபின்றைத் தலைமகளைக் காட்டிக் கொடுத்துத் தோழி தலைமகனுக்கு ஓம்படை சொல்லுதல். அதற்குச் செய்யுள் :—

பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னாடிறத் துச்சிலம்பா
வறந்திரி தந்துன் னருளும் வறிதாய் வரு(?ரின்)மறையின்
றிறந்திரிந் தார்கலி யும்முற்றும்வற் றுமிச் சேணிலத்தே.
—திருக்கோவை - 213.

மென்முலை வீழினுங் கூந்த னரைப்பினும் விண்ணுரிஞ்சு
நன்மலைநாட விகழல்கண் டாய்நறை யாற்றுவென்ற
வின்மலைதானைநெடுந்தேர் விசாரி[தன்]வேந்தர்பெம்மான்
[கொன்மலி வேனெடுங் கண்ணிணைப் பேதைக் கொடியி
[னையே.

—பாண்டிக்கோவை.

சுரத்துய்த்த லென்பது... ...

[அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல் காண்டோறும் வண்ட] றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே.

—நற்றிணை-9.

மெல்ல மெல்லநின் னல்லடி யாற்றி
வருந்தா தேகுமதி ~~வாலெயிற் றோயே~~
யிருந்தண் பொழிலயாஞ் செல்லு மாறே.

—பொருளியல்.

அன்ன நடைமடவா யாற்றி யமைவரார்
சொன்ன வரிய சுரங்கடந்தோ—முன்னமரா்
தங்களூர் போலத் தனியே வடகொங்கிற்
றிங்களூர் தோன்றுஞ் சிறந்து.

—களவித்தெளிவு.



விருந்துவிலக்கு என்பது புணர்ந்துடன் போக்கின்கண் இடைச்சுரத்துக் கண்டார் தலைமகனை விலக்குதல்.

அதற்குச் செய்யுள்:—

விடலையுற் றாரில்லை வெம்முனை வேடர் தமியைமென்பூ
மடலையுற் றார்குழல் வாடினள் மன்னுஞ்சிற் றம்பலவற்
கடலையுற் றாரி னெறிப்பொழிந் தாங்கருக் கன்சுருக்கிக்
கடலையுற் றூன்கடப் பாரில்லை யின்றிக் கடுஞ்சுரமே.

—திருக்கோவை-218.

அலைமன்னு பைங்கழற் செங்கோ
லரிகே சரியணியா
ரிலைமன்னு முத்தக் குடையுடை
யானிகல் வேந்தரைப்போல்
[மலை]மன்னும் வெய்யோன் மறைந்தனன்
மாதரும் வாடினைந்தாள்
சிலைமன்னு தோளண்ணல் சேர்ந்தனை
செல்லெஞ் சிறுகுடிக்கே.

—பாண்டிக்கோவை.

எம்மூ ரல்ல தூர்நணி யில்லை
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
யரிய சேய பெருங்கல் லாறே.

—சிற்றெட்டகம்.

நல்லோண் மெல்லடி நடையு மாற்றல
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
அணித்தாய்த் தோன்றுவ தெம்மூர்
மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே.

—பொருளியல்

செங்கதிர்ச் செல்வனு மத்தஞ் சேர்ந்தனன்
கொங்கிவர் கோதையோ டிவ்வழித்
தங்கினை சென்மே தகைவெய் யோனே.

—பொருளியல்.

எங்களூ ரிவ்வூ ரிதுவொழிந்தால் வில்வேடர்
தங்களூர் வேறில்லை தாமுமூர்—திங்களூர்
நானு மொருதுணையா நாளைப்போ கு(? து)ம்மிந்த
மானும் நடைமெலிந்தாள் வந்து.

—கிளவித்தெளிவு.

வெஞ்சுரமும் போக்கரிது வெய்யோன் மலைமறைந்தான்
குஞ்சரங்க ணின்றதிருங் குன்றமது—பஞ்சநெதி
வங்கியே யன்ன மடமாது நீருமினித்
தங்கியே போகை தரம்.

—பழம்பாட்டு.

நாளை வரகுணர்கோ னங்கையிலே தங்கலாம்
மீளு மமரும் விடிந்துபோ—நீளமுமோ
ரம்பிட் டெயுந்தூர மிவ்வூ ரயில்வேலை
கொம்புக்குங் காலாற[க்]கொண்டு

—பழம்பாட்டு.

பதியளவுரைத்த லென்பது இவ்வகைச் சொல்லி விருந்து விலக்கிய இடைச்சுரத்தார் தலைமக னூர[ள]வு சொல்லுதல். அதற்குச் செய்யுள்:—

மின்றங் கிடையொடு நீவியன் றில்லைச்சிற் றம்பலவர் [லங்
குன்றங் கடந்துசென் றூனின்று தோன்றுங் குரூஉக்கம
துன்றுங்கிடங்குந் துறைதுறை வள்ளை வெள் ளைநகையார்
சென்றங் கடைதட மும்புடை சூழ்தரு சேணகரே.

—திருக்கோவை-221.



நீயு மிவளுமின் றேகின்று சேர்திர்நெல் வேலியொன்னார்
தேயும் படிசெற்ற தென்னவன்[றென்]புன னாட்டிளை
[யோர்
வாயு முகமு மலர்ந்த கமல மணி[த்தடத்துப்]
பாயுங் கயலவர் கண்போற் பிறழும் பழனங்களே.

—பாண்டிக்கோவை.

வில்லார் நுதலியு நீயுமின் றேசென்று மேவுதிர்கு
தெல்லா முணர்ந்தவ ரேழ்பெருந் தங்கத் தியவனர்க
ளல்லா வெனவந்து சத்தியுநந்தாவகைதொழு(கு)ஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரு நாட்டகமே.

—பல்சந்தமாலை.

* * *

தோழியை வினுதலென்பது தலைமகளை யாடிடத்துக் காணுத செவிலித்தாய் வருந்திச் சொல்லுதல். அதற்குச் செய்யுள் :—

மயிலெனப் பேர்ந்திள வல்லியி னெல்கிமென் மானவிழி
[த்துக்
குயிலெனப் [பேசுமெங் குட்டனெங் குற்றதென் னெஞ்
[சகத்தே
பயிலெனப் பேர்ந்தறி யாதவன் றில்லைப்பல் பூங்குழலா
யயிலெனப் பேருங்கண் ணுயென்கொ லாமின் றயர்கின்
[றதே.]

—திருக்கோவை - 224.

* * *

பிரதி இதனோடு முடிகின்றது.

—

## களவியற் காரிகை: அனுபந்தம்

### I

### சூத்திர வகராதி



### II

### மேற்கோள் நூலின் அகராதி

---

# III

## மேற்கோட் செய்யுளின் அகராதி

## IV நூற்பொருளகராதி

[அனுபந்தங்களிலுள்ள எண்கள்
பக்கங்களைக் குறிப்பன.]

——

## V. மேற்கோள் நூல்களைப் பற்றிய குறிப்பு.

தமிழ் மக்களாகிய நாம் நமது முன்னோர் ஈட்டி வைத்துள்ள தமிழ்நூற் செல்வத்தை அழிவெய்தும்படி புறக்கணித்து வருவதை நமக்கு எடுத்துக்காட்டி நம்மனத்தைப் புண்படுத்துவதாகும் இக் களவியற் காரிகை. இப்பெயர் என்னாற் படைத்துக் கொள்ளப் பெற்றதென முன்னுரையிற் கூறியுள்ளேன். நூற்பெயர்தானு மறியமுடியாதபடி நாம் தமிழ்நூற் பிரதிகளைப் பேணிவருகின்றோம்! இந்நிலையில் இந்நூலின் அளவைக்குறித்து யாது கூறக்கூடும்! நூலின்கண்ணே கூறியுள்ள பொருளின் அளவுகொண்டு இக் குறைப் பிரதியில் 54 காரிகைச் சூத்திரங்க ளுள்ளனவென்று அனுமானிக்கலாயிற்று. எஞ்சியுள்ள நூற்பொருளின் அளவு சிறிதாகவே இருத்தல்கூடும். இதனைக் கருதும்போதும், ஒவ்வொரு காரிகையுரையி னிறுதியிலும் இறையனா ரகப்பொருட் சூத்திரம் வைக்கப்பெற்றிருத்தலை நோக்கும்போதும், குறைப்பிரதியின் முதலிலும் முடிவிலும் 'இறையனாரகப் பொருட்டுறைக்குச் சங்கச்செய்யுளாக வுதாரணமெழுதியது' என வரைந்திருப்பதை யூன்றி பாராயும்போதும், இறையனார் களவியலைப்போன்று இந்நூலின்கண்ணும் 60 காரிகைச் சூத்திரங்களும் உரையும் உளவாகலாமெனத் தோன்றுகிறது. ஆகவே 'களவியற் காரிகை' யென்ற பெயர் பெரிதும் எற்புடைத்தாதலும் காணலாம். இந்நூலும் உரையும் தமிழ்மக்களாற் போற்றுதற்குரிய

வென்று எனது முன்னுரையிற் குறித்திருந்தேன். யான் கூறியதற்குச் சான்று தமிழ்ப்புலவர் பெருமானும் தாக்ஷிணாத்திய கலாநிதியும் ஆகிய மகாமகோபாத்திய ஸ்ரீசாமிநாதையரவர்களே யாவர். சிலமாதங்களுக்குமுன்னே அவர்கள் மூன்றாம் பதிப்பாக வெளியிட்டுள்ள பத்துப்பாட்டின் அடிக்குறிப்பிற் பலவிடங்களில் இந்நூற் சூத்திரங்களையும் உரையிற் கண்ட மேற்கோட்செய்யுட்களையும் எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள். உதாரணமாக அப்பதிப்பில் 17, 129, 171, 200, 202, 317, 319, 357, 497, 530, 575 முதலிய பக்கங்களைக் காண்க.

இவ்வரியவுரையுள் மேற்கோளாக வந்துள்ள நூல்களுள் ஒன்று இதுகாறும் மயக்கத்திற் கேதுவாய்க் கிடந்த நூற்பெயரொன்றினைத் தெளிய வுணர்த்துகின்றது. 'சிற்றெட்டகம்' என்ற நூலின் பெயரைச் 'சிற்றடக்கம்' எனவும், 'சிற்றட்டகம்' எனவும் பலவாறாகக்கொண்டு தமிழறிஞர் எழுதிவருகின்றனர். உதாரணமாக மதுரைத் தமிழ்ச் சங்கத்தினின்றும் வெளியிட்டுள்ள நம்பியகப்பொருள் விளக்கவுரையில் (அகத்திணையியல், சூத்திரம் 6) 'பத்துப் பாட்டும் கலித்தொகையும் ஐங்குறுநூறும் கீழ்க்கணக்கும் சிற்றட்டகமு முதலாகிய சான்றோர் செய்யுட்களெல்லாம் வேண்டிய முறையானே வைத்தலானும்' எனக் காணப்படுகின்றது. இதனடிக்குறிப்பிற் 'சிற்றடக்கம்' என்பது பிரதிபேதமாகக் காட்டப்பட்டுள்ளது. களவியற்காரிகையுரை 'சிற்றெட்டகம்' என



வே நூற்பெயரையாண்டும் வழங்குகின்றது. இதுவே நூற்பெயராதல் வேண்டுமென்பது பெயரைநோக்கிய வளவானே உணர்தல் கூடும். ஐந்திணைகளுள் ஒவ்வொரு திணைக்கும் எட்டுச் செய்யுட்களாக நாற்பது செய்யுட்கள் கொண்ட சிறியதொரு நூலென்று இதனைக் கோடல் தகும். மேலே காட்டிய அகப்பொருள் விளக்கத்தின் உரைவாக்கியங் கொண்டும், அந்நூலின் ஒழிபியலில்(சூத்திரம் 251)'சிற்றட்டகத்துக் குறிஞ்சிப் பாட்டு' 'சிற்றட்டகத்துப் பாலைப் பாட்டு' என்றுவருங் குறிப்புக்கள்கொண்டும், இந்நூல் ஐந்திணையையுங் குறித்தவொரு முறையை மேற்கொண்டு விளக்குவதென்பது பெறப்படும். ஐங்குறுநூற்றின் அச்சுப்பிரதியிறுதியிற் காணப்படுகின்ற 6 செய்யுட்களும் சிற்றெட்டகத்தைச் சார்ந்தவை யென்று அதன் பதிப்பாசிரியராகிய ஸ்ரீ ஐயரவர்கள் ஒருமுறை யெனக்குத் தெரிவித்தார்கள். அவ் ஆறனுள் ஒன்றாய் 'எம்மூரல்ல தூர்நணித் தில்லை' என்று வருவதனைச் சிற்றெட்டகச் செய்யுளாகவே களவியற் காரிகையுரையுங் காட்டியிருப்பது கண்டு மகிழத் தக்கது. இந்நூலின் செய்யுட்கள் பல தொல்காப்பிய வுரைகளிற் பலவிடத்தும் மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ளன.

இக் களவியற்காரிகை யுரையிலே காணும் நூல்களில் ஒரு சிலவற்றைப் பற்றிப் பெயர்கள் மாத்திரமே யறியலாவன. அகத்திணை, இன்னிசைமாலை, ஐந்திணை, கிளவி மாலை, கிளவித் தெளிவு, கிளவி

விளக்கம் என்னும் இந் நூல்களனைத்தும் அகப்பொருள் குறித்து வெண்பாவினால் இயன்றுள்ளனவாம். 'நெடுவேறுடக்கிய' என்று தொடங்கும் அகத்திணைச் செய்யுள் நம்பி யகப்பொரு ளுரையிலும் காட்டப்பட்டுளது. களவித்தெளிவு என்ற நூல் திருக்கோவையாரை யடியொற்றி யியற்றப் பெற்றதெனக் கருதுதற்கிடமுண்டு. இஃது எவ்வாறாயினும், தில்லை நகரோடு சம்பந்தமுடைய தென்பது 'தில்லை நக ராரணங்கே' என்று இதன் செய்யுளொன்றில் வருவதனால் அறியலாம். வடகொங்குநாட்டுத் திங்களூர் என்ற ஊரொன்றும் இதன்கட் கூறப்பட்டுள்ளது. களவிவிளக்கம் என்ற நூல் 'நெய்தல்வாய்' என்றவொரு தலைநகரிலே யிருந்து 'வன்னாடு' என்ற நாட்டினை யரசுபுரிந்து வந்த குறுநிலமன்ன னொருவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப்பெற்றதாகும்.

கண்டனலங்காரம் எனக் குறிக்கப்பெற்றுள்ள நூல் பெரிதும் ஆராய்தற்குரியதொரு சிறந்த நூலாகும். இதன்செய்யுட்களில் ஒருசில நம்பியகப்பொரு ளுரையிற்காணப்படுகின்றன. 'ஊசறொழிலிழக்கும்' என்று வருங் கண்டனலங்காரச் செய்யுள் தண்டியலங்கார வுரையின் கண்ணும் வருகின்றது. இதனால் தண்டியலங்கார வுரையில் வரும் உதாரண வெண்பாக்களிற் பல கண்டனலங்காரத்தைச் சார்ந்தனவாதல் வேண்டுமென ஊகித்தற் கிடமுண்டு. சோழவரசர்களுள் இரண்டாம் இராஜராஜனுக்குக் 'கண்டன்' என்ற சிறப்புப்பெய ருள்ளமை தக்கயாகப் பரணி



யுரையாலும், இராஜராஜசோழ னுலாவாலும் விளங்குகின்றது. வீரசோழிய வுரையால் வீரராசேந்திரனுக்கும் கண்டன் என்னுஞ் சிறப்புப் பெயருண்மை தெளியலாம். இப் பெயர் சோழர்க்குரிய பொதுப் பெயராகப் பிற்காலத்தோரால் வழங்கப்பெற்றிருத்தலுங் கூடும். இப் பெயர்பற்றிச் சிலாசாஸன வாராய்ச்சியாளர் அறுதியிடும்வரை 'கண்டனலங்காரம்' யாரைக் குறித்து இயற்றப் பெற்றதென ஒருதலையாகத் துணிந்து கூறுதல் ஏலாது. கண்டனைப் 'பூபால தீபன்' என்றும் ஒருசெய்யுள் குறிக்கின்றது.

மேற்கோளாகக் கோவை நூல்கள் ஒருசிலவும் எடுத்தாளப்பட்டுள்ளன. அரையர் கோவையிலிருந்து ஒரு செய்யுள் தரப்பட்டுள்ளது. இதன்கண் 'தயாபரன் றஞ்சை யன்னாய்' என வருகின்றது. ஆனால் இது தஞ்சைவாணன் கோவைச் செய்யு ளன்று. தஞ்சையில் அரசுபுரிந்த பிறிதோ ரரசனைப் பாட்டுடைத்தலைவனைக் கொண்டு இயற்றப்பெற்றதாதல் வேண்டும். வங்கர் கோவையைக் குறித்தும் யாதும் அறியக் கூடவில்லை. 'வங்கர் குலோத்தமன் வண் கடந்தை' என வருதலால் 'சோழர்' 'பாண்டியர்' என்பன போன்று 'வங்கர்' என்பதும் அரசகுலப் பெயரா மென்பதும், அக் குலத்தினர் 'கடந்தை' என்பதைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தனரென்பதும் அறியக் கிடக்கின்றன. தலைநகர்ப் பெயர் 'தடந்தை' யெனவும் ஒருசெய்யுளிற் காணப்படுகின்றது. பாண்டிக்கோவை என்ற சிறந்த நூலினைக் குறித்து எனது முன்னுரை

யிலே எழுதியிருக்கிறேன். இலக்கணவிளக்க வுரை
காரர் இந்நூற்பெயரைக் குறித்திருக்கின்றனர். இந்
நூற் செய்யுட்கள் நக்கீரர் களவியலுரையின்கண்ணே
மிகுதியாய்க் காணப்படுகின்றன. இதுவரை மூன்று
களவியலுரைப் பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. இப்
பதிப்புக்க ளனைத்தினும் காணப்பெறாத பல அரிய
செய்யுட்கள் களவியற்காரிகை யுரையில் வந்துள்ளன.
இவை யனைத்தையுந் தொகுப்போமாயின், பாண்டிக்
கோவை முழுதும் நமக்குக் கிடைக்கலாமென்று
தோன்றுகிறது. இந்நூல் ஞானசம்பந்த மூர்த்திகள்
காலத்தவராகிய நெல்வேலிவென்ற நெடுமாறனுரைப்
பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இயற்றப்பெற்ற
சிறந்த கோவை நூலாகும். இது மாணிக்க வாசக
சுவாமிகளது திருக்கோவைக்குக் காலத்தால்முற்பட்ட
தாதல் வெளிப்படை. ‘மண்டலம் பண்டுண்ட திண்
டேர் வரகுணன்’ என்றவொரு பழம்பாட்டுக் களவி
யற் காரிகை யுரையிற் காணப்படுகின்றது இச்செய்
யுள் யாப்பருங்கல வுரையினும் வருகின்றது. இதனால்
வரகுண பாண்டியனைப் பாட்டுடைத் தலைவனாகக்
கொண்ட கோவை யொன்று முற்காலத் திருந்தமை
பெறப்படும்.

பல்சந்த மாலையென்ற பெயருடைய நூல் ஒருசில
செய்திகளைப் புலப்படுத்துகின்றது. பன்னிருபாட்டிய
லிற் பல்சந்தமாலை யென்றொரு பிரபந்த வகை கூறப்
பட்டுளது. இந்நூல் அப் பிரபந்தவகையைச் சார்ந்த
தாக இருத்தல்கூடும். ஆனால் இதன்கணின்றுகளவியற்



காரிகை யுரையிற் காட்டப்படுவன வெல்லாம் கலித்து
றைச் செய்யுட்களே. இந்நூல் வச்சிரநாட்டு வகுதாபுரி
யில் அரசுபுரிந்துவந்த அஞ்சுவன்னத்தவர் மரபினரா
கிய ஓர்முகமதிய மன்னனைக் குறித்துப் பாடப் பெற்ற
தாகும். வகுதாபுரியை இக்காலத்திற் காயற் பட்டினம்
என வழங்குவர். சைய்யித் அப்துல் காதர் (சீதக்காதி)
யென்ற பிரபு இந்நகரிலேயே வாழ்ந்துவந்தவர். ‘மன்
மதன் வச்ர நாடன் வகுதை வாழ் சீதக்காதி’ யென்ற
நொண்டிநாடகச் செய்யுளால் இது விளங்கும். வகு
தாபுரிக்கு‘அந்துபார்’ எனவொரு பெயரும் இருத்தல்
வேண்டு மென்பது ஒருசெய்யுளாற் புலப்படுகின்றது.

தில்லையந்தாதி, நறையூரந்தாதி என்ற ஒரு சில அந்
தாதிகளும் மழவையெழுபது என்ற நூலும் மேற்கோ
ளாகக் காட்டப்பெற்றுள்ளன. இவைசிவபரமாகவுள்ள
நூல்கள். கோயிலந்தாதி யென்பது திருவரங்கத்துப்
பெருமாளை விஷயமாகக்கொண்டு பாடிய நூல். இவற்
றுள் ஒன்றேனும் கிடைப்பதாகத் தெரியவில்லை.

தமிழ்நெறி விளக்கம் என்னும் அரிய இலக்கண
நூலொன்று மிகவும்பாராட்டி எடுத்துக் காட்டப்பட்
டுள்ளது. இது பொருளிலக்கணத்தை விரித்துக் கூறு
வது; பல வியல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளதாகல்
வேண்டும். இவ்வியல்களுட் பொருளியற் சூத்திரங்
கள் சிலவற்றைக் களவியற்காரிகை யுரை தருகின்றது.
ஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களும் இவ்விலக்கண
நூலைப் பலவிடங்களிலுங் குறித்திருக்கின்றார்கள்.
இதன் பிரதி ஒருசில ரிடத்தேனும் இருப்பது நமது
நல்லதிருஷ்டமே.

பொருளியல் எனப்பெயர்சிறந்த இலக்கிய நூலொன்று அடிக்கடி எடுத்துக் காட்டப்படுகிறது. இப்பெயரினை நோக்கும்போது தமிழ்நெறி விளக்கப் பொருளியலோடு நெருங்கிய தொடர்புடையதா யிருத்தல் வேண்டுமென ஊகித்தல் தகும். இவ்விலக்கிய நூல் நம்பி யகப்பொரு ளுரையிலும் தொல்காப்பிய வுரையிலும் எடுத்தாளப்படுகின்றது. 'மண்மிசை விளங்கிய வழுத்தூர் மதிதான் - நுண்ணிய றமிழி னுழை பொருள் துளித்த - வாய்மொழி யமிழ்த மடுத்தவர் மனமென' என்று வரும் செய்யுட் பகுதி இந்நூலாசிரியரின் ஆசிரியரைக் குறிக்கலாமென்று கருதப்படுகின்றது. இவ் வழுத்தூராசிரியர் தமிழ்நெறி விளக்கத்தைச் செய்தாராக இருத்தலுங் கூடும்.

ஒரு சில செய்யுட்கள் நற்றிணை, குறுந்தொகை முதலிய நூல்களிலிருந்து உதகரிக்கப்பட்டினக் காட்டப்பெற்றபோதிலும், அவை அந் நூல்களிற் காணப்பெறவில்லை. இவ்வாறான இடங்களில் நூற்பெயரினை யடுத்து வினாக்குறியிட்டு வைத்துள்ளேன்.

மேற்குறித்தனவேயன்றி, நூற்பெயர் போலும் அறியப்படாத பல செய்யுட்களைப் 'பழம்பாட்டு' எனக் குறியீடு செய்து இக்காரிகையுரை யெடுத்துக் காட்டுகின்றது. எத்தனை அரிய நூல்களை நாம் இழந்துவிட்டோமென்பதைக் கணக்கிடவும் முடியவில்லை. இதுவரை யிறந்துபோகாது எஞ்சிநிற்கும் நூல்களை இனியேனும் போற்றி, அவற்றிற்கு அச்சுவாயிலாக நிலைபெற்ற வடிவங் கொடுத்துத் 'தமிழ்மக்கள்' என்னும் பெயர்க்குத் தகுதியுடையாராக நம்மைச் செய்துகொள்ளுதல் நமக்குரிய முதற் கடமையாகும்.

---

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3. | 11. | பொருட்டுறை: | பொருட்டுறைக்குச் |
| 4. | 16. | மா | ...தனவும்; மா |
| 6. | 14. | யரே' | யியரே' |
| ,, | 26. | தனிகருகாத | தனிக்கோத |
| 8. | 20. | மென்றூர் | மென்றூர்: |
| 14. | 4. | மணிதென் | மணிதெண் |
| 16. | 2. | பாராட்டி | யாட்டி |
| 17. | 17. | (உயிரெனவியத்தல்) | நீக்குக |
| 18. | 16. | [னி]ன்று | [னின்று] |
| 24. | 20. | தான் | [தான்] |
| 27. | 11. | | இவ்வரியின் பின் 'காண்குவிரா...' என்பதனைச் சேர்க்க. |
| 29. | 9. | | இவ்வரியின் பின் '...கண்ணேகா... பெருமலைச் சாரற் சீறூரென் - னருக குறைவாங்கிய...' என்பதனைச் சேர்க்க. |
| 32. | 8. | வியத்த | [வியத்]த |
| 48. | 14. | தகை மறுப்பே. | ? தழைமறுப்பே. |
| 61. | 3. | ...ருகணையா | ?...ருகணையால் |

## தமிழ்காரதி ஆதார் நூற்றொகுதி

இத்தொகுதியில் தமிழிலுள்ள நிகண்டுகளனைத்தும்
வெளியிடப்பெறும்

முதலாவது வெளியீடு

### நாமதீப நிகண்டு.

[விலை ரூபா **2-0-0**]

நிகண்டுகளின் வரலாறு, ஆசிரியரது காலம், நூலின் நயங்கள்: முதலியன அடங்கிய சிறந்த முன்னுரை கொண்டது. பொருட் பெயர்களை விளங்கக் கூறும் செவ்விய உரைபாடமுள்ளது. நூலின்கண் வந்துள்ள பொருட்பெயர்களனைத்தையும் முற்ற வுணர்த்தும் அனுபந்தம் பெற்றது. சுமார் 12000 சொற்கள் கொண்ட சிற்றகராதியாக உதவுந் தகையது.

இரண்டாவது வெளியீடு

மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு

### அருஞ்பொருள் விளக்க நிகண்டு.

[விலை ரூபா **1-4-0**]

சிறந்த ஒருசொற் பல்பொருள் நிகண்டு. நிகண்டுகளின் வரலாற்றினை விளக்கும் விரிந்த முன்னுரையுடன் கூடியது. சொல்லின் பொருள்களை யெளிதாகத் தெரிந்துகொள்ளுதற்குப் பலபொருளொருசொல்லகராதி சேர்க்கப்பட்டுள்ளது.

மூன்றாவது வெளியீடு

### பிங்கலந்தை.

[விரைவில் வெளிவரும்]

கிடைக்குமிடம்:—

பதிப்பாசிரியர்

தமிழ் - லெக்ஸிகன் ஆபீஸ்,

'லிம்ப்டி கார்டன்ஸ்' இராயப்பேட்டை, சென்னை.

Printed at The B. N. Press, Mount Road, Madras.

